REGD. No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு

பெரும் புகழ்

பேச்சு மேடையில் பெரும் புகழ் பெற விரும்புவோருக்கு அச்சம், தயை, தாட்சண்யத்துக்குக் கட்டுப்பட்டு கருத்தை அடக்கு வைக்கும்குணம் இருத்தலாகாது.

பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

பெண்

சுயமாகத் தியாகம் செய்யும் பண்பும், தாய்மையும் சேர்ந்த சொருபமாக பெண் இல்லாவிட்டால் பின் பெண் என்பதற்கே அர்த்தமில்லை.

-அண்ணல் காந்தி

மலர்: 3 (●) சென்னை 23—3—1979 வெள்ளி (★)❋●❋(★) வெளியீடு 24—3—1979 சனி (●) இதழ்: 155

## அமைச்சர் சவுந்தரராசன் மீது கூறிய புகாரை நிரூபிக்காவிட்டால் ராஜினமா செய்யத் தயாரா?

## கருணாநிதிக்கு

# புரட்சித்தலைவர் நேரடி சவால்

**சென்னை, மார்ச் 23- அமைச்சர் சவுந்திரராசன் மீது கருணநிதி கூறிய புகார் நிரூபிக்கப்பட்டால் சவுந்திரராசன் அமைச்சர் பதவி, சட்டமன்ற உறுப்பினர் பதவி இரண்டையும் ராஜினமாச் செய்யத்தயாராக இருக்கிருர். குற்றச்சாட்டு நிரூபிக்கப்படாவிட்டால் சட்டமன்ற உறுப்பினர் பதவியை ராஜினமாச் செய்ய கருணநிதி தயாரா என்று முதல்வா புரட்சித்தலைவர் சவால் விடுத்தார்.**

திண்டுக்கல் டாக்டர் வேலை நீக்க உத்தரவு ரத்து செய்யப்பட்ட பிரச்னையில் ரூ 25 ஆயிரம் கைமாறிய தாகமக்கள்நல்வாழ்வுத்துறை அமைச்சர் ஆர் சவுந்தரராசன் மீது ஒரு குற்றச்சாட்டை சட்டசபையில் நேற்று கருணநிதி சுமத்திஞா அல்லவா?

அதுபற்றி இன்று சட்டசபையில் நிதி அமைச்சர் நாஞ்சிலார் தமது உரையில் குறிப்பிட்டதாவது:

எதிர்க் கட்சித் தலைவர் கூறிய குற்றச்சாட்டுக்கான ஆதாரம் அவரிடம் இருந்தால் அந்த ஆதாரங்களை அவர் முதலமைச்சரிடம்தரட்டும்முதலமைச்சர் மீது அவருக்கு நிரம்ப நம்பிக்கை இருக்கிறது விசாரித்து குற்றம் ருசுவானல் அமைச்சர் பதவியை மட்டுமல்ல சட்டமன்ற உறுப்பினர் பதவியையும் ராஜினமா செய்ய ஆர் சவுந்தரராசன் தயாராக இருக்கிருர்.

அதே போல அவர் மீது குற்றம் ருசுவாகவில்லை என்றுல் எதிர்க்கட்சித்தலைவர் கருணநிதி தமது பதவியை ராஜினமா செய்யத் தயாரா?

கருணநிதி: இந்தச் சம்பவத்துக்கு ஆதாரம் தேவை என்றுல் சாட்சி கொண்டு வருகிறேன் நீதிபதியை நியமியுங்கள் எப்படி அந்த டாக்டர் பிடிபட்டார்? எப்படி விசாரணை நடந்தது? எப்படிமீண்டும் வேலையில் சேர்க்கப்பட்டார் என்ற விவாதத்தை நீதிபதியிடம் தர தயாராக இருக்கிறேன்

## பதில் எங்கே?

நாஞ்சிலார்நான்சொன்னதற்கு இன்னும் பதில் வரவில்லை.குற்றம்நிருபிக்கப்படாவிட்டால் எதிர்க்கட்சித்தலைவர் தனது பதவியை ராஜினமா செய்யத் தயாரா?

கருணநிதி: நான்முன்பே பல குற்றச்சாட்டுக்களை சொல்லியிருக்கிறேன் குமாரபாளையத்தில் நூல் விற்பனை ஊழல் உட்பட பல புகார்களைக் கூறியிருக்கிறேன் எல்லாவற்றிற்கும் விசாரணை நடத்தட்டும்

முதல்வர் புரட்சித்தலைவா: ரூ. 25 ஆயிரம் லஞ்சம் வாங்கியதாக நிருபித்தால் அமைச்சர் பதவியையும், சட்டமன்ற உறுப்பினர் பதவியையும் இழப்பதற்கு அமைச்சர் சவுந்தரராசன் தயார் எதிர்க்கட்சித் தலைவர் இதற்கு என்ன பதில் கூறுகிருர்! இதற்கான பொறுப்பைஏற்றுக் கொள்கிருரா?

கருணநிதி: எங்கள் மீது ஜனதிபதியிடம் புகார் பட்டியல் கொடுத்தபோது அதற்கான பொறுப்பை தாங்களே ஏற்றுக்கொள்வதாக கூறிவிட்டு சர்க்காரியா கமிஷன் முன்பு அதற்கு நான் பொறுப்பில்லை என்று கூறியவர் நீங்கள். சேலம் வழக்கறிஞர் தான் பொறுப்பு என்று கூறியவர் நீங்கள். இந்த லட்சணத்தில் என்னிடம் இதைக் கூறுகிறீர்களா?

முதல்வர்: சாதாரண எம் எல் ஏ பதவியில் இவ்வளவு பற்றுவைத்திருப்பவர்கள் என்பதுஎனக்குஇப்போது தெரிகிறது நான் அப்போது கூறிய கருத்துக்கள் எல்லா பத்திரிகைகளிலும் வந்துள்ளன.

புகாரை அப்பொழுது யார் அனுப்பினர்களோ அவர்கள் பொறுப்பு என்பதை தெளிவுபடுத்தியிருக்கிறேன். என் லட்சணத்தை நான் கண்ணுடியில் பார்த்துக்கொள்கிறேன் உங்கள் லட்சணத்தை வேண்டுமானல் நீங்கள் பார்த்துக் கொள்ளுங்கள்

கருணநிதி: ஜனதிபதியிடம் அனுப்பியபுகாருக்கு நானே பொறுப்பு என்று கூறி விட்டு சர்க்காரியா கமிஷன்முன் நான்பொறுப்பல்ல என்று கூறியவர் நீங்கள் இந்த சட்டசபை செத்துவிட்டது என்று கூறிவிட்டு பதவியைவிட்டு விலகாமல் சம்பளம் பெற்றுக் கொண்டிருந்தது யார என்று தெரியும்

புரட்சித் தலைவர்: (நல்வாழ்வுத் துறை அமைச்சர் மீதான) இந்த புகாருக்கு நானே பொறுப்பு ஏற்பதாக அவர் சொன்னா குற்றச்சாட்டு கூறுகிறவரே அதற்கு பொறுப்பு ஏற்க வேண்டும் இப்போது இந்தப் பிரச்சினைக்கு பதில் என்ன? குற்றச்சாட்டு நிருபிக்கப்படாவிட்டால் பதவியை விட்டுவிடுவாரா? சட்டமன்றம் பற்றி நான் கூறியதை எதிர்க் கட்சித் தலைவர் சொன்னர் சட்டசபை செத்துவிட்டதாக நான் கூறியதன் காரணம் என்ன? இதனை நான் பலமுறை விளக்கமாககூறிவிட்டேன். இதே சட்டமன்றத்தில் இருதலைவர்களை வைத்து இரு சபைகள் நடத்தப்பட்டன. நியாமும் செத்தது. ஆகவேதான் அன்று சட்டசபை பற்றி அப்படிக் கூறினேன்.

நான் இப்போது பதவியிலிருப்பதன் காரணம் ஜனநாயகத்தில் சில கொள்கைகளை மக்களிடம் சொல்கிருேம்

அவற்றை மக்கள் ஏற்று நம்மிடம் பொறுப்பை ஒப்படைக்கிருர்கள். அப்படிப்பட்ட நேரங்களில் பொறுப்பை ஏற்காமல் ஓடிவிடுவது கோழைத்தனம்.

எனவேநாங்கள்சொன்னவற்றைச் செய்வதற்காகத்தான் இங்கே நாங்கள்உட்கார்ந்திருக்கிருேம் எனக்கு பதவி முக்கியமல்ல என்பதை எதிர்க்கட்சித்தலைவர் அறிவார்.

முன்பு என்னிடம்இருந்த எம் எல் ஏ பதவியைராஜினமாச்செய்தேன்

அப்பொழுது அண்ணவிடம் நான் கூறியதெல்லாம் அவருக்குத் தெரியும்.

நாட்டு மக்களுக்குத் தெரிய வேண்டிய உண்மைகள் தெரிந்தாக வேண்டும்.

அமைச்சர் சவுந்திரராஜன் பற்றி அவாகளது ஏட்டில் சிவப்பு எழுத்தில் பெரிதாக புகார் கூறி செய்தி வெளியிட்டு இருக்கிருர்கள்

சவுந்திரராஜன் அவ்வாறு பணம் பெற்றதாக நிரூபித்தால் அமைச்சர் பதவியையும், சட்டமன்ற உறுப்பினா பதவியையும் ராஜினமா செய்ய அவர் தயாராக இருக்கிருர்

அவ்வாறு நிருபிக்காவிட்டால் குற்றம் சாட்டியவர்கள் சட்டமன்லஉறுப்பினர்பதவியைராஜினமாச் செய்யத் தயாரா?

கருணநிதி: சர்க்காரியா கமிஷன் விசாரணையில் எல்லா குற்றங்களும் நிருபிக்கப்படவில்லை நிருபிக்கப்படாத குற்றங்களுக்காகப் புகார் கொடுத்தவா அப்போதும் சரி இப்போதும் சரி எந்தப் பொறுப்பிலிருந்தும் விலகவில்லை. இந்தப் புகார் குறித்து நீதிவிசாரணைக்கு உத்தரவிடுங்கள் எதிர்க்கட்சியாக இருந்தபோதுஎப்படியெல்லாம்விசாரணைநடக்க வேண்டுமென்று நீங்கள் கூறினீர்களோ அப்படி வேறு மாநில நீதிபதியை நியமித்து விசாரணை நடத்துங்கள் நிரூபிக்கிருேம்

முதல்வர்: நாங்கள் ஜனதிபதியிடம் புகார் கொடுக்கும் பொழுதோ மற்ற சமயங்களிலோ இவ்வாறு யாரும் ராஜினமாச் செய்யத் தயாரா என்று கேட்கவில்லை. அப்படி அவர்கள் கேட்டு இருந்தால் அவற்றுக்குப் பதில் கிடைத்து இருக்கும் அன்றைக்கு இருந்ததுபோல் இப்போது நிலைமை இல்லை இப்போது நிலைமை வேறு நாங்கள் கொடுத்த புகார்களில் சில புகார்களில் மட்டுமே "பிரைமா பேசி" (முகாந்திரம்) இல்லை என்றனர். அப்போது யாரும் ராஜினமா பற்றிப்பேசவில்லை.

அந்தச் சமயத்தில் வேறு என்னவோ எல்லாம் கூறினர்கள் ஒரே மேடையில் வந்து விவாதிக்கத்தயாரா என்றுர்கள்.

ஒரே நேரத்தில் அப்படிப் பேசினல் விபத்து ஏற்படும் என்றேன் இப்போது நாங்கள் அருகிலிருந்து நேருக்கு நேர் பேச முடிகிறது எதையும் ஒரே மேடையில் பேசாமல் இங்கே இருந்து நேருக்கு நேர் பேசி அந்தக்கருத்துக்கள் மக்கள் மத்தியில் பரவ வாய்ப்பு ஏற்படுகிறது

சுப்பு: (திமுக) குற்றச்சாட்டை ஒருவர் கூறும் போது அது நிருபிக்கப்படாவிட்டால் அவ்வாறு புகார் கூறியவருக்கு தண்டனை கொடுக்கவே பொதுவாழ்வில் உள்ளோர் குற்றத் தடுப்புச் சட்டம் கொண்டுவரப்பட்டது. அந்தச் சட்டத்தைக் கூட நீக்கிவிட்டார்கள் ஆகவே அந்தச் சட்டத்திற்கு இந்தப் புகாரும் பொருந்தும்.

முதல்வர்: நல்ல வழக்கறிஞர் என்பதை சுப்பு நிருபிக்கிருர். அந்த விசாரணைக்கும நீதி விசாரணைக்கும் நிறைய வித்தியாசம் உள்ளது சர்க்காரியா கமிஷன் விசாரணை போல் அல்ல அது நீங்கள் கேட்டபடியே விசாரணைக்கு உத்தர விட அரசு தயார். இந்த அரசு நடவடிக்கை எடுப்பது இம்

2-ம் பக்கம் பார்க்க

ஜெ பி உடல் நிலை

## ஓரளவு மாறுதல்

பம்பாய், மார்ச் 23- ஜெயப்பிரகாசர் இன்னும் ஆபத்தான கட்டத்தை தாண்டவில்லை என்றாலும் அவரது உடல்நிலை நேற்றைக்கு இருந்ததைவிட இன்று சற்று சீரடைந்துள்ளது என்று பகலில் வெளிவந்த மருத்துவ அறிக்கை கூறுகிறது

அவரை இன்று குடியரசுத் தலைவர் சஞ்சீவ ரெட்டி இரண்டாவது முறையாக ஆஸ்பத்திரிக்கு சென்று பார்த்தார்

## ✻ஊராட்சிவளர்ச்சி மானியக் கோரிக்கை

சென்னை மார்ச் 23- சமுதாய வளர்ச்சிஊராட்சி வளர்ச்சி ஆகியவற்றுக்கான 40 கோடியே 89 லட்சத்து 64 ஆயிரம் ருபாய்க்கான மானியக் கோரிக்கையையும் நகர்ப்புற வளர்ச்சிக்கான மானியக் கோரிக்கையையும் சட்டமன்றத்தில் உள்ளாட்சித் துறை அமைச்சர் காளிமுத்துஇன்று(வெள்ளி) தாக்கல் செய்தார்,

✻ சிவில்சப்ளை ஊழியர்

## ஸ்டிரைக் வாபஸ்

சென்னை, மார்ச் 23- கடந்த சில நாட்களாக வேலைநிறுத்தபோராட்டம் நடத்தி வந்த நுகர்பொருள் வாணிபக் கழக தொழிலாளர்கள் தங்களது போராட்டத்தை வாபஸ் பெற்றனர் என்று சங்க மாநிலத் தலைவா தொ. ஜானகிராமன் கூறியுள்ளார்.

★ தேங்காய் வரி ரத்து ★ வேலைவாய்ப்பு உறுதித் திட்டத்தை நிறைவேற்றியே தீருவோம் ★ மாநில அரசுகளுக்கு மத்திய அரசு நிதி கொடுத்தது எப்படி ★ கன்னியாகுமரியில் ரப்பர் ஆலை ★ மின்சாரத் திட்டத்திற்கு ரூ. 152 கோடி ★ அன்னைத் தமிழுக்காக உயிர் நீத்தோர் குடும்பத்தினருக்கு உதவி

## 'சொன்னதைச் செய்வோம்: இயலாவிட்டால் பதவியில் ஒட்டிக் கொண்டிருக்க மாட்டோம்'

# நாஞ்சிலார் முழக்கம்

**சென்னை, மார்ச் 23— வேலைவாய்ப்பு உறுதித் திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றியே தீருவோம். தமிழுக்காக உயிர் நீத்தோர் குடும்பத்திற்கு உதவியளிப்போம், கன்னியாகுமரியில் ரப்பர் ஆலை அமைப்போம், நாங்கள் சொன்னவைகளையெல்லாம் நிறைவேற்றியே தீருவோம். அப்படி நிறைவேற்றாவிட்டால் அட்டைபோல பதவியில் ஒட்டிக் கொண்டிருக்காமல் வெளியேறுவோம் என்று நிதியமைச்சர் நாஞ்சிலார் முழக்கமிட்டார்**

தேங்காய்க்கு விதிக்கப்பட்ட வரி ரத்து செய்யப்படுகிறது, தீப்பெட்டிக்கு விதிக்கப்பட்ட வரி தளர்த்தப்படுகிறது. என்றும அவர் தெரிவித்தார்

நிதிநிலை அறிக்கைமீதான விவாதத்திற்கு நிதியமைச்சர் நாஞ்சிலார் இன்று (வெள்ளி) சட்டமன்றத்தில் பதிலுரைத்துப் பேசியதாவது:-

மூன்றுவது முறையாக இந்த அவையில் நான் சமர்ப்பித்த நிதி நிலை அறிக்கையில் கலந்து கொண்டு பலரும் பல கட்சித் தலைவர்களும் தங்கள் கருத்துக்களைத் தெரிவித்திருக்கிருர்கள்.

நான் எதிர்க்கட்சித் தலைவரைப்போல நீண்டநேரம் பேச விரும்பவில்லை. குறிப்பாகச் சொல்லப்பட்ட சில பிரச்சினைகளுக்கும் எழுப்பப்பட்ட கருத்துக்களுக்கும் பதில் தருவது கடமை என்ற கருத்தில் இங்கே பேசுகிறேன்.

எதிர்க்கட்சித் தலைவர் நான் கடைசியாகத் தந்த சொல்லை குறிப்பிட்டு தனக்கே உரிய பாணியில் கருத்தை சொல்லியிருக்கிருர் எனக்கு இருக்கிற மகிழ்ச்சி எல்லாம் இந்த பகுதிகளை பலபேர் சுட்டிக் காட்டினுர்கள்

எந்த நோக்கத்தில் இந்த கருத்து எழுதப்பட்டது தந்த மாளிகையில் இருப்பவர்கள் தாழ்வரத்திற்கு வரவேண்டும் என்று இந்த வாசகம் எழுதப்பட்டது அந்த மாளிகையில் இருந்து கொண்டு நிதியமைச்சர் இந்த நிதிநிலை அறிக்கையை எழுதியிருக்கிருர் என்று பலர் குறிப்பிட்டார்கள்,

## மக்கள் தந்த மாளிகை

நான் குறிப்பிட்ட தந்த மாளிகை என்பது "ஐவரிடவர்" என்று ஆங்கிலத்தில் சொல்லப்படுவதாகும். அவர்கள் குறிப்பிட்டபடியே தந்த மாளிகையில் இருந்து தான் எழுதினேன் அது 'மக்கள் தந்த மாளிகையில்' இருந்துதான் எழுதினேன் (பலத்த கைதட்டல்)

'ஐவரி டவர்' என்பதற்கு பொருள் ஒரு கற்பனையான இடத்தில் இருந்துகொண்டு செயல்முறைகளை வகுப்பது என்பதாகும்.

நம்முடையஎதிர்க்கட்சித் தலைவர் அவர்கள் இன்னும் சற்று கீழே போய் 'தந்த மாளிகையிலிருந்து தாழ்வாரத்திற்குவரவேண்டும என்பதல்ல தெருவோரத்திற்கே வரவேண்டும்' என்று குறிப்பிட்டார்.

நான் குறிப்பிட்டதன் பொருள் அவருக்குத் தெரியாததல்ல. தெரிந்துவைத்துக் கொண்டேதான் வேண்டுமென்றே அப்படிச் சொல்லுகிருர். அவரை நான் நீண்ட நாட்களாக அறிந்தவன் அல்லவா?

ஒரு ஆட்சிக்கட்சியில் இருந்துகொண்டு ஆட்சிக்கட்சிக்கும் சேர்ந்து இந்த கருத்தைச் சொல்லுகிற என்னுடைய துணிச்சலை அவர்கள் புரிந்துகொள்வார்கள் என்று நம்புகிறேன்.

நிதியமைச்சர் பினமியாக இருக்கிருர் என்று இங்கே பலர் குறிப்பிட்டார்கள் அதற்காக நான் மகிழ்ச்சி அடைகிறேன்.

அந்த நிதிநிலை அறிக்கைக்கு சொந்தக்காரர் எனக்கு பக்கத்திலே உட்கார்ந்திருக்கிற முதலமைச்சா.

(பலத்த கைதட்டல்)

இவ்வளவு திட்டங்கள் இருக்கும் இந்த நிதிநிலை அறிக்கையை பாராட்டக்கூடாதா? நிதியமைச்சராகவும், முதலமைச்சராகவும் இருந்து இன்றைக்கு எதிர்க்கட்சித் தலைவராக இருக்கின்றவர் நிதியமைச்சா மனேஹரனைப் பாராட்டினல் என்ன கெட்டுப்போய்விடும்?

இந்தபட்ஜெட்டில்ஒன்றுமில்லை என்று யாராவது மனதாரசொல்லமுடியுமா? பம்பாயிலே இருந்து வருகின்ற 'எக்னமிக் டைம்' (Economic Time பத்திரிகை பாராட்டுகிறது. தோளோடு தோளாக ஒரு காலத்தில் பணியாற்றிய

(2-ம் பக்கம் பார்க்க)

## தொழிலாளியிடம் முதல்வர் புரட்சித் தலைவர் காட்டிய பரிவு

சென்னை, மார்ச்-23 இன்று வெள்ளி காலையில் "தெய்வத்திருமணங்கள்" படப்பிடிப்பு துவக்க விழாவிற்கு சத்யா ஸ்டுடியோவிற்கு வந்த புரட்சித்தலைவர், அங்குள்ள தொழிலாளி மதுரை என்பவரிடம் காட்டிய பரிவு அனைவரையும் மெய்சிலிர்க்க வைத்தது.

சத்யா ஸ்டுடியோவிலுள்ள சாண்டோ எம் எம் ஏ சின்னப்பதேவர் படப்பிடிப்பு அரங்கில் சோலார் கம்பைன்ஸின் "தெய்வத் திருமணங்கள்" என்ற படப்பிடிப்பின துவக்கவிழா இன்று (23-ம் தேதி) காலை நடைபெற்றது.

இந்த படப்பிடிப்பின் துவக்க விழாவை முதல்வர் புரட்சித்தலைவர் காமிராவை முடுக்கி துவக்கி வைத்தார்.

துவக்க விழாவுக்கு அமைச்சர்கள் எட்மண்ட், ராகவானந்தம், தமிழக அரசின் டெல்லி பிரதிநிதி க ராசாராம், ஜேப்பியார். கே. கண்ணன் டைரக்டர்கள் ப. நீலகண்டன், கே. சங்கர், கே எஸ் கோபாலகிருஷ்ணன், ஜெமினிகணேசன், மனேகர் நாகேஷ். தேங்காய் சீனிவாசன், வெண்ணிறஆடை நிர்மலா, எம், என் ராஜம் கவிதா, ராஜசுலோசன, ஏ. சகுந்தலா வீ எஸ் கிருஷ்ணமூர்த்தி, கோவிந்தராசன், சகஸ்ரநாமம், கவிஞர் முத்துலிங்கம், எலிசண்ட கமலநாதன், தி. நகர்மூர்த்தி, கு. க. செல்வம் மற்றும் ஏராளமான திரையுலகினர் திரண்டு வந்திருந்தனர்.

துவக்க விழாவுக்கு வந்திருந்தவர்களை தயாரிப்பாளர் மணிஅய்யர் வரவேற்றா.

சங்கர் டைரக்ஷனில் வெண்ணிற ஆடைநிர்மலா நடித்த முதல் காட்சியை முதல்வர் புரட்சித்தலைவர் காமிராவை முடுக்கி வைத்துப் படமாக்கினர்.

முதல்வர் புரட்சித் தலைவர் காலை 8-55 மணிக்கு அரங்குக்குள் வந்தார். சரியாக 9-மணிக்கு படப்பிடிப்பை ஆரம்பித்து வைத்தார்,

மதுரை என்ற தொழிலாளி கூட்டத்தில் எங்கோ ஒரு மூலையில் நின்றுகொண்டிருந்தார் அரங்குக்குள் நுழைந்த புரட்சித்தலைவர் அவரை அழைத்து மதுரையின் தோள்மீதுகைவைத்து 'சவுக்கியமா?' என்று பாசத்துடன் கேட்டார்.

இந்தக்காட்சிமதுரையை மட்டுமல்ல, அனைவரையும் மெய்சிலிர்க்க வைத்தது

'தெய்வத்திருமணங்கள்' படத்தின் டைரக்ஷனை ப நீலகண்டன், கே சங்கர் கே எஸ் கோபாலகிருஷ்ணன் ஆகியோரும், கதை வசனத்தை ப. நீலகண்டன், கண்ணதாசன், கே. எஸ். கோபாலகிருஷ்ணன் ஆகியோரும் இசையை கே வி மகாதேவன். எம் எஸ் விசுவநாதன், ஜி கே வெங்கடேஷ் ஆகியோரும்செய்கின்றனர் இப்படத்தின் பாடல்களை கவியரசு கண்ணதாசன், கவிஞர் முத்துலிங்கம் எழுதுகின்றனா.

லட்சுமி கல்யாணம், மீனட்சிகல்யாணம், வள்ளி திருமணம் ஆகிய மூன்று பிரிவுகளாக சேர்த்து உருவாக்கப்படுகிறது. கே. கண்ணன், தேங்காய் சீனிவாசன், நாகேஷ், மனேகர், மற்றும் ஏராளமான கலைஞர்கள் படத்தில் பங்கேற்கின்றனர்.

வேறு இடம் தேவையில்லை - சங்கரமடத்தின் அருகேதான் சிலை வைப்பு என்றால்... அனுமதி கிடையாது

அமைதி - சட்டம் - ஒழுங்கு கெடாமலிருக்க

# அரசு முறைப்படி நடவடிக்கை எடுக்கும்

## காஞ்சியில் பெரியார் சிலை வைப்பு பற்றி கருணாநிதிக்கு புரட்சித்தலைவர் திட்டவட்ட பதில்

**சென்னை, மார்ச் 23-காஞ்சியில் பெரியார் சிலை வைக்க அனுமதி உண்டு ஆனால் மத நம்பிக்கை உள்ளவர்களின் மனதை புண்படுத்தி அதன் மூலம் அமைதி கெடும் வகையில் குறிப்பிட்ட ஒரு மடத்தின் அருகேதான் சிலை வைப்போம் என்றால் அமைதி குலைய, சட்டம் ஒழுங்கு கெட அரசு அனுமதிக்காது என்று முதல்வர் புரட்சித் தலைவர் சட்டசபையில் கருணாநிதிக்கு திட்டவட்டமாக அறிவித்தார்.**

மார்ச் 22-ந் தேதி சட்டசபையில் பட்ஜெட் பொது விவாதத்தின்மீது கருணாநிதி பேசுகையில் புரட்சித் தலைவருக்கும் கருணாநிதிக்கும் இடையே நடைபெற்ற விவாதப் பகுதிகள் வருமாறு:-

கருணாநிதி: பெரியார் நூற்றாண்டு விழாவை இந்த அரசு கொண்டாடுகிறது. ஆனால் காஞ்சிபுரத்தில் பெரியார் சிலை வைக்க வேண்டுமென்று திராவிடர் கழகத்தார் தி.மு. கழக ஆட்சிக் காலத்திலேயே அதற்கான ஒரு இடத்தையும் பெற்று பணத்தையும் கட்டி-பராமரிப்புச் செலவுக்கான பணத்தையும் கட்டி திமுக ஆட்சியில் அந்த இடம் தரப்பட்டுவிட்டது. ஆனால் அந்த சிலை வைக்க இந்த ஆட்சியில் இதுவரை அனுமதி அளிக்கப்படவில்லை.

### வேறு இடத்தில் சிலை வைக்க அனுமதி உண்டு

புரட்சித்தலைவர்: இதில் ஒரு விளக்கம் தர வாய்ப்புத்தந்ததற்காக எதிர்கட்சித்தலைவருக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன் அவர்கள் கேட்டிருந்த இடம் மத நம்பிக்கைக்குரியவர்களுடைய மடம் போன்ற கோயில் போன்ற இடத்திற்கு எதிராக-இடைஞ்சலாக இருக்கின்ற இடத்தை கேட்டதாக குடியரசுத்தலைவர் ஆட்சிக்காலத்தில் அதுபற்றி பரிசீலிக்கப்பட்டு கூடாது முடியாது என்று மறுக்கப்பட்டு விட்டது. நான் வந்த பிறகு அந்த புகாரை கவனித்து யார் என்ன சொல்லுகிறார்கள் என்ற கருத்தையும் கேட்டபோது பொதுவாக எனக்கு சொல்லப்பட்ட யோசனை மாத்திரமல்ல நானே ஒரு சமயம் காஞ்சிபுரத்திற்கு சென்றபோது அந்த இடத்தைப் பார்க்க நேர்ந்தது அங்கிருந்து வந்த பிறகு உத்தரவே போட்டுவிட்டேன் வேறு ஒரு இடத்தை அவர்கள் கேட்பார்களேயானால் அந்த இடத்தைக் கொடுக்க வேண்டுமென்று உத்தரவிட்டு சில மாதங்களாகின்றன.

கருணாநிதி: சங்கராச்சாரியார் மடம் இருக்கிறதென்றால் அந்த இடத்திற்கு எதிரிலே பெரியாருடைய சிலை இருக்கக் கூடாது என்பது என்ன நியாயம் என்று எனக்குப் புரியவில்லை.

புரட்சித்தலைவர்: நம்பிக்கை உள்ளவர்களாக இருந்தாலும், நம்பிக்கை இல்லாதவர்களாக இருந்தாலும் இருவருக்கும் மன நிம்மதியும்-பாதுகாப்பும் அளிக்கவேண்டுமே தவிர அங்கே சச்சரவுகள் வேறு துர்நிகழ்ச்சிகள் ஏற்பட்டுவிடக்கூடாது. அந்தசிலையை வைக்க வேண்டாம் என்று சொன்ன உத்தரவை மாற்றி வேறு இடத்தில் எங்கு கேட்டாலும் மக்களுக்குப்பயன் படுகின்ற இடத்தில் ஏற்பாடு செய்து கொடுங்கள் என்று நான் உத்தரவிட்டிருக்கிறேன்.

கருணாநிதி: ஒருவேளை போக்குவரத்துக்கு இடைஞ்சலான இடம் என்பதால் அதை அனுமதிக்கவில்லை என்ற கருத்தை முதலமைச்சர் சொல்வார் என்று நினைத்திருந்தேன். சங்கராச்சாரியார் மடம் இருப்பதால் அனுமதிக்கப்படவில்லை என்று திட்டவட்டமாக முதலமைச்சர் அறிவித்தார்

### குழப்பங்கள் வரலாம்

புரட்சித்தலைவர்: நான் சங்கராச்சாரியாருக்காகத்தான் சொல்வதாக இருந்தால் அதை துணிவோடு சொல்கின்றவன்: ஏனென்றால் அவரைச் சந்தித்து அவரோடு என்ன சொல்லுகிறார் என்று கேட்டு கருத்துக்கள் பரிமாறிக்கொண்டு வந்தவன் நான். அந்த வகையில் ஒரு துறவிக்கு அடையாளமாக வாழ்ந்து கொண்டிருக்கிறார் என்பதை இந்த மாமன்றத்தில் மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறேன். அதிலே எனக்கு கொஞ்சமும் சந்தேகமில்லை. ஆனால் அவருக்காகவோ அந்த மதத்திற்காகவோ அல்லது இட நெருக்கடிக்காகவோ பிரித்து பார்ப்பதற்கில்லாமல் இட நெருக்கடியும் இருக்கிறது. எதிர்காலத்தில் அரசியல் நெருக்கடிகள்- மத நெருக்கடிகள் போன்ற குழப்பங்கள் வரலாம். அதெல்லாம் தோன்றக் கூடாது என்பதற்காகத்தான் இந்த நிலைமையை நான் ஏற்படுத்திக் கொண்டிருக்கின்றேன்.

கருணாநிதி: சங்கராச்சாரியார் மடத்திற்கு எதிரிலே பெரியார் சிலையை வைப்பதால் பெரிய மதப் புரட்சி- மதப் போராட்டம் வந்துவிடும் என்றெல்லாம் சொல்வதை என்னைப் பொறுத்தவரை நான் ஏற்கத் தயாராக இல்லை.

நான் ஏற்கனவே அறிவித்திருக்கிறேன். ஒருமாத காலத்திற்குள்ளாக குறிப்பிட்ட இடத்தில்-திராவிடர் கழகத்தினர் கேட்டுள்ள இடத்தில் பெரியாருடைய சிலையை வைக்க அனுமதி மறுக்கப்படுமேயானால் அந்த சிலையை வைக்கின்ற முயற்சியிலேயே தடையை மீறி நானே தலைமையேற்று அந்தச் சிலையை வைக்க முற்படுவேன்.

புரட்சித்தலைவர்: எதிர்க்கட்சித்தலைவர் திட்டவட்டமாக அறிவித்துவிட்டதால் நானும் முதலமைச்சர் என்ற நிலைமையில் இங்கேயே பதில் சொல்லி விடுகிறேன். எந்தக்காரணத்தைக் கொண்டும் அந்த இடத்தில் சிலை வைக்க இந்த அரசு அனுமதிக்காது!

கருணாநிதி: எப்படியும் அந்த இடத்தில் திமு கழகம் பெரியார் சிலையை வைத்தே தீரும்!

இதைத் தொடர்ந்து சபையின் இருதரப்புக்களிலிருந்தும் பெரும் கூச்சலும் ஆரவாரமும் எழுந்தது சிலையை வைத்தேதீருவோம் என்று திமுக உறுப்பினர்கள் கூச்சலிட்டனர்.

விடமாட்டோம் முறியடிப்போம் என்று அனைத்திந்திய அண்ணா திமு கழக உறுப்பினர்கள் முழக்கம் எழுப்பினார்கள்.

துரைமுருகன்: பெரியார் சிலையை உடைப்போம் என்று சொல்கிறார்களே! இது சரிதானா?

### நாஞ்சிலார் மறுப்பு

நாஞ்சிலார்: பெரியார் சிலையை உடைத்து விடுவோம் என்று யாரும் சொல்லவில்லை. சிலை வைக்கும் திட்டத்தை முறியடிப்போம் என்றுதான் ஆளும் தரப்பு உறுப்பினர்கள் கூறினார்கள்.

கருணாநிதி: சங்கராச்சாரியாருக்காக அந்த சிலையை உடைப்போம் என்கிறார்கள்.

புரட்சித்தலைவர்: மரியாதைக்குரிய சங்கராச்சாரியாருக்காக இந்த அரசு பேசவில்லை. ஒருபொதுத் தன்மையோடுதான் சொல்கிறோம்.

(துரைமுருகன் குறுக்கீடு-அவையில் கூச்சல்)

துரைமுருகன்: பெரியார் சிலையை உடைப்போம் என்று சொல்கிறீர்களே

புரட்சித் தலைவர்: இந்த வார்த்தையை நாங்கள் சொல்லவில்லை என்று திட்டவட்டமாக அறிவிக்கிறேன் அவர்கள் சொன்ன வார்த்தை "அந்த முயற்சியை முறியடிப்போம்" என்றுதான் சொல்லியிருக்கிறார்கள், தயவுசெய்து யாரும் திரித்துப் பேசவேண்டாம். ஆகவே சட்டமன்றத்தில்சொல்லப்பட்ட பிரச்சினைக்கு பதிலுரை தரப்பட்டிருக்கிறது. அவ்வளவுதான்வெளியேதான் அந்தக் கட்சிக்காரர்கள் அவர்கள் கொள்கையைச் சொலவேண்டுமேதவிர மக்கள் மன்றத்திற்குச் செல்லவேண்டுமேதவிர-இதை மக்கள் மாமன்றமாக்கிவிடக்கூடாது.

சிலை வைக்க அரசு அதிகாரிகள் அனுமதி கொடுக்காமல் இருக்கிறார்கள் என்பதுபற்றித்தான் எதிர்க்கட்சித் தலைவர் புகார் கூறுகிறார் என்றுதான் முதலில் நான் நினைத்தேன் இப்போது அவர் பேசுவதைப் பார்த்தால் ஏற்கனவே அவர் ஒரு முடிவுக்கு வந்திருப்பதைத்தான் எதிர்க் கட்சித் தலைவருடைய பேச்சுக் காட்டுகிறது.

ஒருமாதம் தவணை கொடுத்துச்சொன்னதால் முதலமைச்சர் என்ற ரீதியில் பதில் சொன்னேன், அதே நியதியில்தான் இப்போதும் சொல்கிறேன். இந்த அரசைப் பொறுத்தவரை யாருடைய சிலையை வைப்பதிலும் எங்களுக்கு ஆட்சேபணையில்லை.

ஆனால் இந்த அரசு அனைவருக்கும் பொதுவானது யாருக்காகவும் இந்த அரசுதான் கொண்ட கொள்கையை விட்டுவிடாது. எந்த ஒரு தனி மனிதன் கொள்கைகளுக்காகவும் தமிழ்நாட்டில உயிர்பலிகள் விழவும் அதனால் சட்டம் ஒழுங்கு அமைதிகெடும் நிலை ஏற்படுவதை இந்த அரசு அனுமதிக்காது

அதன் காரணமாகவே பொதுமக்களின் நன்மையை முன்னிட்டுத்தான் அங்கு சிலைவைக்க அனுமதிக்க முடியாது என்று அரசு சொல்கிறது. அநியாயமாக பல உயிர்பலிகள் ஏற்பட அது ஒரு காரணமாக அமைந்துவிடக் கூடாது அப்படிப்பட்ட ஆபத்தான நிலைமை ஏற்படுவதற்கு நாம் யாரும் காரணமாக இருக்கக்கூடாது என்பதற்காகத் தான் இந்த நிலைமையை தான் இங்கே நான் வெளியிட வேண்டியிருக்கிறது.

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் விளக்கம் அளித்தார்.

**மதநம்பிக்கைஉள்ளவர்கள்-இல்லாதவர்கள் அனைவருக்கும் பொதுவாக நடக்கும் கடமை அரசுக்கு உண்டு.**

-புரட்சித்தலைவர்

## நாஞ்சிலார் முழக்கம்

[1-ம் பக்கத் தொடர்ச்சி]

எதிர்க்கட்சித் தலைவர் பாராட்டாததற்கு மெத்த வருத்தப்படுகிறேன்.

அவருக்குமிகவும் பிடித்த 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' பாராட்டி இருக்கிறது, 'இந்து' பத்திரிகை பாராட்டி இருக்கிறது. 'மெயில்' பத்திரிகையை பற்றிச் சொன்னால் எதிர்கட்சித்தலைவருக்கு கோபம் வரும், அந்த பத்திரிகையும் பாராட்டி இருக்கிறது. அவருக்கு மிகவும் பிடித்த-ஆதாரம் காட்டுவதற்காக எடுத்து வருகிற 'தினமணி' பத்திரிகையும் பாராட்டி இருக்கிறது.

'புகார்களுக்கு இடம் தராத பட்ஜெட்-சாதுவான பட்ஜெட்' என்று தினமணி கடைசி பகுதியிலே கூறியிருக்கிறது

பத்திரிகைகள் பாராட்டுகின்றன. பாராட்டுகிற உள்ளம் படைத்தவர்களெல்லாம் பாராட்டுகிறார்கள். பாராட்டக்கூடாது என்று யாருக்கும் இல்லை. சிலபேர் உள்ளூர பாராட்டுகிறார்கள். எதிர்க்கட்சித் தலைவரும் அப்படித்தான்.

1975-76ல் பல திட்டங்களுக்கு ஒதுக்கப்பட்ட நிதி அளவைவிட இப்பொழுது ஒதுக்கப்பட்டுள்ளதொகை குறைவு என்றுஎதிர்கட்சித் தலைவர் நேற்று சுட்டிக் காட்டினார். உண்மையில் நான் அவருக்குத் தெரிவிக்க விரும்புவது அதிகமான தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பது தான் (அறிக்கையில் பல பகுதிகளை நிதியமைச்சர் நாஞ்சிலார் அவையில் படித்துக் காட்டினார்)

### வேலைவாய்ப்பு உறுதித்திட்டம்

யாரோ பெற்ற குழந்தை என்று இங்கு பலர் குறிப்பிட்டார்கள்.

யாரோ பெற்ற குழந்தைக்கு நீங்கள் பெயர் வைப்பானேன் என்று இங்கு கேட்டார்கள், சோஷலிசம் என்பது ரஷ்யா பெற்ற குழந்தை அதை நேரு எடுத்துக் கொண்டு பெயர் சூட்டி பாராட்டினார்.

இன்றைக்கு எதிர்க்கட்சித் தலைவராக இருக்கிறவர் அன்றைக்குப் பலதிட்டங்களை வகுத்தார் அந்த நல்ல திட்டங்களை யாரோ பெற்ற குழந்தை என்றுவிட்டுவிட முடியுமா?

நேற்று இங்கே பேசிய அழகிரிசாமி இது ஒன்றும் பெரிய புரட்சிகரமான திட்டமில்லை என்றும் ஏற்கனவே சில மாநிலங்கள் இதை அமல்படுத்தி வருகின்றன என்றும் கூறினார். இந்தத் திட்டம் தேவையான நல்ல திட்டம் என்பதை அனைவரும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள் சரியானபடி நிறைவேறுமா என்பதில் தான் சிலருக்கு சந்தேகம்.

வேலை செய்கின்றவர்களுக்கு 3 ரூபாய் அரிசி, கோதுமை கொடுக்கப்படும் என்று குறிப்பிட்டிருக்கிறோம்

இந்த 3 ரூபாய்போதுமா என்று கூடக்கேட்டார்கள் இந்தத் திட்டத்தை நிறைவேற்ற காண்ட்ராக்டர்கள் அனுமதிக்கப்படமாட்டார்கள் அதன்மூலம் ஊழல்கள் நடக்க வாய்ப்பு ஏற்படும் என்பதுதான் காரணம்.

படித்த, படிக்காத 18 வயதுக்குமேற்பட்டவர்கள் தங்களுடைய பெயர்களை பதிவு செய்து கொள்ளலாம் வேலை செய்கிற காலத்தில் 3 ரூபாய், அரிசி கோதுமை கொடுக்கப்படும் வேலை இல்லாத காலத்தில் ஒவ்வொருவருக்கும் ஒரு ரூபாயும், அரிசியும் கோதுமையும் அளிக்கப்படும்.

ஒரு மாவட்டத்திற்கு 2500 பேர் என்று கணக்கெடுத்தால்கூட ரூ. 35 கோடிக்குமேல் தேவைப்படுமே-இந்தத் திட்டத்தை நிறைவேற்ற முடியுமா? என்று கேட்டார்கள்.

இந்தத் திட்டத்தை இந்த அரசு செயல்படுத்தி வெற்றி பெற்றே தீரும்.

(பலத்த ஆரவாரம்)

உங்களுக்கு 150 கோடி ரூபாய் தர்மமாகக்கிடைத்திருக்கிறது என்று கூறினார்கள்.

நிதிக்குழுவிற்கு கொடுத்த அறிக்கையில் எந்த அளவுக்கு வற்புறுத்திக் கொடுத்திருக்கிறோம். போராடியிருக்கிறோம் என்பதை எதிர்க்கட்சித் தலைவர் அறிந்திருப்பார் என்று நம்புகிறேன்.

தீர்மானம் நிறைவேற்ற முடியுமா? மத்திய அரசை எதிர்க்கத்தயாரா?எதிர்க்க முடியுமா என்றெல்லாம் கேட்டார்கள்.

பேசியே தீர்க்க முடியும்-பெற முடியும் என்று நம்பிக்கை கொண்டுள்ள அரசு இது. பேசியே தீர்க்க முடியும் என்றிருக்கும்போது வாள் எடுப்பானேன்? துப்பாக்கி ஏந்துவானேன்? (நிதிக்குழுவிற்கு அளித்த அறிக்கையில் சிலபகுதிகளை நிதியமைச்சர் நாஞ்சிலார் அவையில் படித்துக் காட்டினார்.)

### டெல்லியிடம் வற்புறுத்தல்

அதிக நிதிதரும்படி நிதிக் கமிட்டியிடமும் திட்டக் குழுவிடமும் எடுத்துச் சொன்னோம் தேசிய வளர்ச்சிக் கூட்டத்தில் முதலமைச்சரும் நானும்பேசும்போது மாநில அரசை சமபங்காளியாகக் கருத வேண்டும, முதலாளி, தொழிலாளி என்ற அளவில் உறவு இருக்கக் கூடாது என்றெல்லாம் வலியுறுத்தியிருந்தோம்

நமது உரிமைகளை துளிகூட நாங்கள் விட்டுக் கொடுக்கவில்லை. ஆகவேதான் மாநில அரசுகளுக்கு மத்திய அரசு அதிக நிதி கொடுத்துள்ளது.

மதுவிலக்கை அமல்படுத்துவதால்ஏற்படும்இழப்பை சரிக்கட்ட நிதியுதவிசெய்ய வேண்டும் என்று மத்திய அரசிடம் வற்புறுத்தி வருகிறோம். சென்ற வாரம் கூட மத்திய நிதியமைச்சருக்கு முதல்வர் கடிதம் அனுப்பினார்.

### அதிக நிதி ஒதுக்கீடு

மின்சார திட்டத்திற்கு இந்த அரசு ரூ 152 கோடி ஒதுக்கியுள்ளது. இதற்கு முன் எப்போதும்இவ்வளவு தொகை ஒதுக்கியதில்லை. நாட்டின் வளர்ச்சிக்கு மின்சாரமும் கல்வியும் முக்கியமானவை என்று இந்த அரசு கருதுகிறது.

பாசன வசதிக்கு 28.48 கோடியும், சாலை பராமரிப்புக்கு கூடுதலாக ரூ 7 கோடியும் ஒதுக்கப்பட்டுள்ளது.

எல்லா பள்ளிகளுக்கும் ஆய்வுக்கூடம் கட்ட அரசு திட்டமிட்டுள்ளது.

காவல் துறைக்கு அதிக நிதி ஒதுக்கியதன் மூலம் அந்தத் துறை மேலும் சீர்பட வாய்ப்பு உள்ளது.

அரசு ஊழியர்கள் சைக்கிள் வாங்க 400 ரூபாயும் ஸ்கூட்டர் வாங்க 4 ஆயிரத்து 500 ரூபாயும் ஒதுக்கி இருப்பது போதாது என்று சொன்னார்கள்,

400 ரூபாயில் நல்ல சைக்கிள் வாங்கலாம். மொபெட், சுவேகா போன்றவை ரூ. 2800 லிருந்து ரூ. 3300க்குள் வாங்கலாம்.

மத்திய அரசின் திட்டமான பேர்பூட் டாக்டர்கள் முறையை ஏற்றுக் கொள்ள முடியாது என்று தமிழக அரசு அறிவித்து விட்டது.

குறைந்தபடிப்புள்ளடாக்டர்களை கிராமப்பகுதிக்கு அனுப்பி மக்கள் தொகை குறைய வாய்ப்பு ஏற்படுத்தகூடாது.

படித்த டாக்டர்களே வேலையில்லாமல் இருக்கும்போது பேர்பூட் டாக்டர்கள் முறை தேவையில்லை என்று அரசு கருதுகிறது

### ரப்பர் ஆலை

கன்னியாகுமரியில் ரப்பர் தொழிற்சாலை அமைக்க அரசு முடிவு செய்துள்ளது.

விடுதலைப் போர்வீரர்களுக்கு வழங்கப்படும் நிதியுதவி ரூ 75லிருந்து 100 ரூபாயாக உயர்த்தப்பட்டுள்ளது.

தமிழுக்காக உயிர் நீத்தவர்களின் குடும்பத்தாருக்கு உதவி தரப்பட இருக்கிறது

எல்லைபோர் தியாகிகளுக்கு நிதிஉதவ சட்ட முன் வடிவு அவையில் தாக்கல் செய்யப்படும்.

இந்த நிதிநிலை அறிக்கையில் கருத்துக்கள்வரிகளாக வந்துள்ளனவே தவிர வரி இல்லை.

மத்திய அரசு ஏன் வரி போடவில்லை என்று கேட்கிறது

வரி போட்டு மக்களை வாட்டும் அரசாக இந்த அரசு இருக்காது என்று நாங்கள் கூறுகிறோம்.

தேங்காய்க்கு மட்டும்வரி போட்டோம். தமிழ்நாட்டில் 1205 தேங்காய் வியாபாரிகள் உள்ளனர். அதில் 25 ஆயிரம் ரூபாய்க்குமேல் வியாபாரம் ஆகும் வியாபாரிகள் 413 பேர் நாங்கள் போட்ட வரி சிறுவியாபாரிகளைப் பாதிக்காது.

தீப்பெட்டித் தொழில் கடந்த 13 ஆண்டுகளில் பெருமளவில் வளர்ச்சி அடைந்துள்ளது.

சமூகக் கடமையைக் கருதி தீப்பெட்டிவியாபாரிகள் புதிதாகப் போடப் பட்டுள்ள வரியைக் கொடுக்க வேண்டும்.

உமாநாத்: இவ்வாறுவரி போடுவதால் உபயோகிப்பவர்கள்தான் பாதிக்கப் படுகிறார்கள்.

நாஞ்சிலார்: வரி உயர்வையொட்டி விலைகளை உயர்த்தக்கூடாது. அப்படி உயர்த்தினால் உயர்த்துகிறவர்கள் கபியெண்ண வேண்டும் என்பதை முதல்வர் சார்பில கூறிக்கொள்கிறேன்.

கேரளாவில் 3 சதவிகித ஒரு முனைவரி உள்ளது. ஆந்திராவில் 4 சதவிகித பலமுனைவரி உள்ளது. இப்போது நாம் போட்டிருப்பது 2 சதவிகித வரிதான்.

பல்வேறு தரப்பினரின் கருத்துக்களை அறிந்து தேங்காய்க்குப் போட்டவரியை இந்த அரசு ரத்து செய்கிறது,

தீப்பெட்டிக்கு விதிக்கப்பட்டவரி ரூ 50 ஆயிரத்துக்கு மேல் வியாபாரம் ஆனால் மட்டும்பொருந்தும் என்றுதளர்த்தப்படுகிறது.

இந்த ஆட்சி விவசாயிகள் தொழிலாளர்கள் ஏழை மக்கள் நல்வாழ்விற்கு தன்னை ஈடுபடுத்திக் கொண்டுள்ள ஆட்சியாகும் நாங்கள் சொன்னவற்றை நிறைவேற்றிய தீருவோம்

அப்படி நிறைவேற்றாவிட்டால்பதவியில் அட்டை போல ஒட்டிக் கொண்டிருக்க மாட்டோம்.

வணக்கம் சொல்லிவிட்டு கோட்டையை விட்டு வெளியேறுவோம் ஆகவே உறுதியாகக் கூறிக்கொள்கிறேன்.

இந்த ஆட்சி ஏழை, எளிய மக்களின் நல்வாழ்வுக்காக சொன்னவற்றை நிறைவேற்றும்.

இவ்வாறு நிதியமைச்சர் நாஞ்சிலார் கூறினார்.

கவிஞர் கண்ணதாசன் மீது வழக்கு தொடருவதுதானே!

## கருணாநிதிக்கு புரட்சித் தலைவர் நேரடி கேள்வி

கருணாநிதி: நாமெல்லாம் தந்தை பெரியார் என்று போற்றுகின்ற அவர்களுடைய குடும்பத்தைப் பற்றி தாறுமாறாக ஏளனமாக எழுதிக் கொண்டிருக்கிற ஒருவர் அரசவைக் கவிஞராக இருக்கிறார்.

அவர் பெரியாரைப் பற்றிச் சொல்லிய அந்த வார்த்தைகளைச் சொல்லி அவைக் குறிப்பில் பதிவு செய்ய நான் விரும்பவில்லை.

அப்படிப்பட்ட ஒருவரை அரசவைக் கவிஞராக வைத்திருக்க வேண்டுமா என்ற அந்தக் கோரிக்கையை வைத்துத்தான் திராவிடர் கழகத்தார் இன்று மறியல் நடத்துகிறார்கள்.

முதல்வர் புரட்சித்தலைவர்: அரசவைக் கவிஞர் அல்ல. அரசு கவிஞர். அவர் எழுதியது தவறு என்பதை எப்படிச் சுட்டிக்காட்ட வேண்டுமோ அந்த அளவிற்கு சுட்டிக்காட்டி இருக்கிறேன். அவரே வருத்தம் தெரிவித்திருக்கிறார். அதிலே இருக்கிற பிரச்சினை கருணாநிதி தம்மிடம் சொன்னதாக அவர் எழுதியிருக்கிறார். அது உண்மையா, இல்லையா என்பதைப் பற்றி முடிவு சொல்ல எனக்குத் தெரியாது. நடந்தது அவர்களுக்குத்தான் தெரிய வேண்டும். நீங்கள் சொல்லாததை அவர் (கண்ணதாசன்) எழுதினால் அதற்காக வழக்கு தொடர்ந்து வழக்கு நடைபெறுமானால் நான் மகிழ்ச்சி அடைவேன்.

கருணாநிதி: அவர்கள் வழக்கு தொடர்வதாக இல்லை நீதிமன்றம் செல்வதாகவும் இல்லை மக்கள் மன்றத்திற்கு செல்லத் தயாராக இருக்கிறார்கள் அவர்களோடு சேர்ந்து திமுகழகமும் மக்கள் மன்றத்திற்குச் செல்லத் தயாராக இருக்கிறது.

புரட்சித்தலைவர்: மக்கள் மன்றத்தற்கு செல்வது அவர்களுடைய விருப்பம் மக்கள் என்ன சொல்கிறார்கள் என்பதும், விளைவு என்ன ஏற்படும் என்பதும் எதிர்காலத்தில் தெரிய வேண்டியது. இன்னொருவர் சொன்னதாக அவர் எழுதுகிறார் அவர் மீது நியாயமான வழக்கைப் போடுவதுதான் முறையாக இருக்கும்

கருணாநிதி: அப்படித் தந்திரமாக யார் வேண்டுமானாலும் எழுதலாம், முதலமைச்சர் ஒருவரைப்பற்றி இதையிதைச் சொன்னார் என்று யாராவது ஒருவர் ஏதாவது ஒரு மஞ்சள் பத்திரிகையில் எழுதிவிடலாம் அதற்காக முதலமைச்சர் பொறுப்பேற்றுக் கொள்பவராக ஆகிவிட முடியாது. அதையெல்லாம் எதிர்த்து வழக்குத் தொடர்ந்து கொண்டிருக்க முடியுமா?

புரட்சித் தலைவர்: எதிர்க்கட்சித் தலைவர் சொன்னது அவைக் குறிப்பில் எப்போதும் இருக்கும். அதை நான் மகிழ்ச்சியோடு வரவேற்கிறேன்.

கருணாநிதி: இப்படிச் சொல்கிற காரணத்தால் முதலமைச்சர் மீது குற்றங்களை சாட்டப்படமாட்டாது என்று அவர் இதை ஒரு கேடயமாகப் பயன்படுத்திக்கொள்ள வேண்டாம்.

புரட்சித்தலைவர். குற்றச்சாட்டுகளுக்கு நான் கவலைப்படவில்லை. அதற்குப்பயந்திருந்தால் இங்கே வந்து உட்கார்ந்திருக்க முடியாது. எவ்வளவு குற்றம் வேண்டுமானாலும் சாட்டட்டும், அதைப்பற்றி கவலையில்லை. யார் வேண்டுமானாலும் எதை வேண்டுமானாலும் எழுத முடியும் என்பது குறிப்பேட்டில் இருக்கிறது என்பதைத்தான் தெரிவித்தேன்.

(சட்டமன்ற நிகழ்ச்சி 22-3-79)

### முதல்வர் சவால்

(முதல்பக்கத் தொடர்ச்சி)

மாமன்றமே எடுத்தது போல ஆகும்.

அமைச்சர் மீது கூறப்பட்ட புகார்ஒருபழி சுமத்தவே ஆகும் குற்றச்சாட்டு நிருபிக்கப்பட்டால் பதவி விலக சவுந்தரராசன் இப்போதும் தயார் அப்படி நிருப்க்கப்படா விட்டால் என்ன செய்யப் போகிறீர்கள்

கருணாநிதி: சவுந்தரராசன் மீது இந்தப்புகார் மட்டுமல்ல இன்னும் பல புகார்களும் என்னிடம் உள்ளன அதேபோல் முதல்வர் மற்றும் சில அமைச்சர்கள் மீதும் சில குற்றச்சாட்டுகள் உள்ளன இவையெல்லாம் விசாரிக்க தனி நீதிபதியை நியமியுங்கள். தனி நீதிமன்றம் நியமித்து நிருபிக்கப்படாவிட்டால் ராஜினாமாச் செய்கிறேன்.

முதல்வர்: தனிக்கோர்ட் அமைத்து பழிவாங்கக் கூடாதுஎன்பதற்காக அதை எதிர்த்து நாங்கள் ஓட்டுப் போட்டு இருக்கிறோம் அப்படி நீங்கள் எங்கள் எல்லாரைப் பற்றியும் புகார் கொடுப்பதாக இருந்தால் பிரதமரிடமோ, ஜனாதிபதியிடமோ கொண்டு போய்க்கொடுக்கலாம தயவுசெய்து உடனடியாக பிரதமருக்கு அனுப்புங்கள்

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் கூறினார்

(இதற்குக் கருணாநிதி பதில் கூறவில்லை)

# ஜெயப்பிரகாசர் மரணம் என்று கொடுத்த தகவல் தவறானது!

## நாடாளுமன்றத்தில்

# பிரதமர் தேசாய் மன்னிப்பு கேட்டார்

## தவறு செய்தோர் மீது நடவடிக்கை பாலா பழனூர் கோரிக்கை

**புதுடெல்லி, மார்ச் 23- ஜெயப்பிரகாசர் இறந்து விட்டார் என்று தவறான தகவலை அறிவித்தமைக்காக நாட்டு மக்களிடமும், நாடாளுமன்றத்திடமும் நிபந்தனையற்ற மன்னிப்புக் கோருகிறேன் என்று மக்களவையில் பிரதமர் மொரார்ஜி நேற்று அறிவித்தார்.**

பம்பாயில் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வரும் ஜெயப்பிரகாசர் இறந்துவிட்டதாக தவறான தகவல் நேற்று பகல் ஒரு மணிக்கு நாடாளுமன்றத்தில் அறிவிக்கப்பட்டது.

### தள்ளிவைப்பு

அதன் பிறகு ஜெயப்பிரகாசரின் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்து மக்களவை மாநிலங்களவை கூட்டங்கள் தள்ளி வைக்கப்பட்டன.

### தவறு

சற்று நேரத்திற்குப் பிறகு இது தவறான தகவல் என்று ரேடியோவில் அறிவிக்கப்பட்டது.

### ராஜினாமா செய்க!

இதன் பிறகு நாடாளுமன்றத்தில் விசேஷ கூட்டத்தை மாலை 5 மணிக்கு சபாநாயகர் கூட்டினார்.

கூட்டம் கூடியதும் எதிர்க்கட்சியினர், "தவறான தகவலை அறிவித்து பாராளுமன்றத்தையும், தேசத்தையும் குழப்பத்தில் ஆழ்த்தியதற்காக. பிரதமர் தேசாயும், அவரது மந்திரிசபையும் ராஜினாமா செய்ய வேண்டும்" என்று குரல் எழுப்பினர்கள்.

### மன்னிப்பு

இதற்கு பதில் அளித்து பிரதமர் தேசாய் கூறியதாவது:-

"தவறான தகவலை தெரிவித்ததற்காக நாடாளுமன்றத்திடமும், தேசத்திடமும் நிபந்தனையற்ற மன்னிப்பு கோருகிறேன்

ஜெயப்பிரகாசர் உடல் நிலைமாற்றி பம்பாயில்

4ம் பக்கம் பார்க்க

## ஜனதா வானொலியின் கருணாநிதி பஜனை

பாரபட்சமில்லாமல் ஜனதா அரசின் வானொலி இயங்கி வருவதாகக் கூறுகிறார்கள்! பெருமையடித்துக் கொள்கிறார்கள். அதை மறுத்து பல சான்றுகளை கூறலாம்.

இரண்டு நாட்களுக்கு முன்பு ஒரு நாள் மாலைச் செய்தியில் நெய்வேலியில் ஒரு வட்டத்தில் இரண்டு பேர் ஜனதாக் கட்சியில் சேர்ந்த செய்தியை வானொலி ஒலிபரப்பியது! 22-ந் தேதி மாலை வானொலியின் மாநிலச் செய்தியில் அரசாங்கத்தின் மீது கருணாநிதி பல்வேறு குற்றச்சாட்டுகளைக் கூறினார். அரசின் அதிகார துஷ்பிரயோகம் பற்றியும் கருணாநிதி குறிப்பிட்டார் என்று வானொலி கூறியது.

ஆனால் கருணாநிதியின் பேச்சில் குறுக்கிட்டு அவரது குற்றச்சாட்டுக்களுக்கு அங்கேயே மறுப்பு உரைத்த முதல்வர் புரட்சித் தலைவரின் பேச்சைப்பற்றி ஒரு எழுத்துக்கூட வானொலி குறிப்பிடவில்லை.

அந்த அளவு வானொலி கருணாநிதிக்கு ஆட்பட்டு விட்டது போலும்.

நாட்டோரே! நல்லோரே!
நடுநிலையாளர்களே!
வானொலியின் போக்கை கவனியுங்கள்!

# கடலூர், நெல்லை வேலூரில் கால்நடை கண்காட்சி

## முதல்வர் புரட்சித் தலைவர் பங்கேற்பு

**சென்னை, மார்ச் 23- கடலூர், நெல்லை, வேலூர் ஆகிய நகரங்களில் கால்நடைக் கண்காட்சி விழாக்கள் நடைபெறுகின்றன. முதல்வர் புரட்சித் தலைவர், அமைச்சர்கள் பண்ருட்டி ராமச்சந்திரன், எட்மண்ட், பி.டி. சரஸ்வதி ஆகியோர் இவ்விழாக்களில் பங்கேற்கிறார்கள்.**

மூன்று மாவட்டத் தலைநகரங்களில் இம்மாதம் இறுதிவாரத்தில் கால்நடைக் கண்காட்சி நடைபெறுகின்றன. இவ்விழாவிற்கான ஏற்பாடுகளை கால்நடை பராமரிப்புத் துறையினர் சிறப்பாகச் செய்து வருகின்றனர்.

### கடலூர்

தென்னாற்காடு மாவட்டம் கடலூரில் இம்மாதம் 27ஆம் தேதி கால்நடைக் கண்காட்சி நடைபெறுகிறது. விழாவிற்கு கால்நடை பராமரிப்புத்துறை அமைச்சர் பி. டி. சரஸ்வதி தலைமை வகிக்கிறார், மின்சாரத்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கால்நடைக்கண்காட்சியை திறந்து வைத்துப் பரிசுகள் வழங்கி சிறப்புரையாற்றுவார்.

### நெல்லையில்

இம்மாதம் 29 ஆம் தேதி திருநெல்வேலியில் கால்நடை கண்காட்சி நடைபெறுகிறது. விழாவிற்கு அமைச்சர் பி.டி.சரஸ்வதி தலைமை வகிக்கிறார். உணவு அமைச்சர் எட்மண்ட் முன்னிலை வகிக்கிறார். விழாவில் பரிசுகள் வழங்கி முதல்வர் புரட்சித்தலைவர் சிறப்புரையாற்றுகிறார்.

### பாளையங்கோட்டை

இம்மாதம் 29 ஆம் தேதி காலை பாளையங்கோட்டை நகரில் பணிபுரியும் பெண்களுக்கான விடுதி திறப்பு விழா நடக்கிறது சமூக நலத்துறை அமைச்சர் பி டி சரஸ்வதி தலைமை வகிக்கிறார், உணவு அமைச்சர் எட்மண்ட் முன்னிலை வகிக்கிறார்.

விடுதியைத் திறந்து வைத்து முதல்வர் புரட்சித் தலைவர் சிறப்புரையாற்றுகிறார்.

ஏழைப் பெண்களுக்கு தையல் மிஷின்களையும், உடல் ஊனமுற்றோருக்கு மூன்றுசக்கரவண்டி போன்ற கருவிகளையும் முதல்வர் புரட்சித்தலைவர் வழங்குகிறார்.

### வேலூர்

இம்மாதம் 31 ஆம் தேதி வட ஆற்காடு மாவட்டம் வேலூரில் கால்நடைக் கண்காட்சி நடைபெறுகிறது. விழாவிற்கு சட்ட அமைச்சரின் பேரவைச் செயலர் ஜெயவேலு தலைமைவகிக்கிறார். அமைச்சர் பி டி. சரஸ்வதி விழாவில் கலந்து கொண்டு பரிசுகள் வழங்கி சிறப்புரையாற்றுகிறார்

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை - 600014, என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர்: பி. தங்கராஜன், நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை, சென்னை, 600004.

ஆசிரியர்:
எம். ஜி. சக்ரபாணி.

# நேரடியான இந்தித் திணிப்பு நாட்டைத் துண்டாக்கும்: கிருஷ்ணன் எச்சரிக்கை

**புதுடெல்லி, மார்ச் 23. "நேரடியாக இந்தியைத் திணிப்பது நாட்டுப் பிரிவினையைத் தான் ஊக்குவிக்கும்" என்று மாநிலங்களவையில் கழக உறுப்பினர் இ. ஆர். கிருஷ்ணன் கடும் எச்சரிக்கை விடுத்தார்.**

இந்தி பேசும் மாநிலங்களில் உள்ள மத்திய அரசு நிறுவனங்கள், வங்கிகள் ஆகியவற்றில் எல்லாக் காரியங்களுக்கும் இந்தியே பயன்படுத்தப்படும் என்கிற முடிவினை எதிர்த்து மாநிலங்களவையில் இ. ஆர். கிருஷ்ணன் பேசியதாவது:

இந்தி பேசும் மாநிலங்களில் வங்கிகளிலும் பொது நிறுவனங்களிலும் இந்தியிலேயே கடிதப்போக்குவரத்து வைத்துக்கொள்ளப்படவேண்டுமென்று மத்திய இந்தி கமிட்டி 17-3-79 அன்று தீர்மானம் நிறைவேற்றியிருப்பதாக பத்திரிகைகளில் செய்தி வந்திருக்கிறது நம்நாட்டின் துணைப் பிரதமர்கள் சில கேபினட் மந்திரிகளுடன் பிரதமர் மொரார்ஜிதேசாயும் அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டதாகச் செய்தி வெளி வந்திருக்கிறது.

பத்திரிகைகளில் வந்த இச்செய்திகள் சரியானவை என்றால் மிகவும் பயங்கரமான ஒரு சூழ்நிலை இந்தத் தீர்மானத்தின் காரணமாக உருவாகக்கூடும் என எச்சரிக்கிறேன்.

### பழிவாங்கும் உணர்ச்சி

பல வருடங்களாக, பல தடவைகளில் அரசு இந்தியைப்புகுத்தாது என்று உறுதிமொழி அளித்துக் கொண்டே வந்திருக்கின்றது. ஆனால் நடைமுறையில் இந்தி பேசாத மக்களின் வெறுப்பை வளர்த்துக் கொண்டே போகும் முறையில் பழிவாங்கும் உணர்ச்சியுடன் இந்தி திணிக்கப்பட்டு வருகின்றது என்பதை மிகவும் வருத்தத்துடன் கூற விரும்புகிறேன்.

இந்தி பேசும் மாநிலங்களானாலும், இந்தியிலேயே வங்கிகளும் பொது நிறுவனங்களும் கடிதப் போக்குவரத்து நடந்தால் என்ன விளைவுகள் ஏற்படுமென்பதை நமது அரசு அறிந்திருக்குமா என்று அறிய விரும்புகிறேன்.

இவ்வாறு தீர்மானிப்பது இந்தி பேசும் மாநிலங்களில் உள்ள இந்தி அறியாத ஆயிரக்கணக்கான மக்களுக்கும், வங்கிகளிலும் பொது நிறுவனங்களிலும் அங்கு உள்ள தொழிலாளர்களுக்கும் இழைக்கப்படும் அநீதியாகும். தெளிவாகக் கூறினால் இந்தி மொழியை நேர்முகமாகவே இந்தி பேசாதமக்கள் மேல் சுமத்த அரசுமுன் வந்துள்ளது. இவ்வாறு இந்திக்கு மட்டும் தனித்தொரு சிறப்பு உரிமை வழங்குவது இந்தியாவிலுள்ள பிறமொழிகளை அவமதிப்பதாகும். மிகவும் கௌரவத்துடனும், பெருமையுடனும் அரசின் சார்பாகக் கூறப்பட்ட உறுதிமொழிகளெல்லாம் இப்பொழுது காற்றில் பறக்கின்றன. பொருளற்றவைகளாகி விட்டன. இந்தி பேசாத மாநிலங்களுக்கு எதிராக நடக்கும் இந்தி ஏகாதிபத்தியத்தை நாங்கள் ஒருக்காலும் பொறுக்க மாட்டோம்.

இவ்வாறு எடுக்கும் தீர்மானங்கள் மூலம் எங்களது வெறுப்பை விலைக்கு வாங்கிக் கொள்ளும் அளவுக்கு நடைபெறும் இந்தி மொழி பிரச்சாரங்கள் ஏற்கெனவே உள்ள கசப்பான நிலைமையை விரோதமனப்பான்மையை வளர்த்துக் கொண்டே போகும்.

அரசு இதுபோல் நேர்முகமாகவும் மறைமுகமாகவும் இந்தியைபுகுத்தும் முயற்சிகளைக் கைவிட்டால் நமது நாட்டுப் பிரிவினையை தவிர்க்கலாம் இவ்வாறு தீர்மானங்கள் எடுத்துக் கொண்டுபோனால் பிறகு நாட்டுப் பிரிவினை தவிர்க்க முடியாத விதியாக விடும் என்று எச்சரிக்க விரும்புகிறேன்.

### பாடம் பெறுவீர்

நம் நாட்டில் உதவாக்கரை செலவினங்கள் வளர்ந்து கொண்டே போவதைத் தடுக்க முயற்சிக்காமல் ஒவ்வொரு ஆண்டும் பதினாயிரம் இந்தி தட்டெழுத்து யந்திரங்கள் வாங்க முயற்சிக்கும் தீர்மானமும் பரிகசிக்கத்தக்கது. பற்றாக்குறைவரவு செலவுத் திட்டத்தை மக்களுக்கு அளித்து அவர்கள் மீது வரிச் சுமையைச் செலுத்திக்கொண்டே போகும் இந்த அரசு இது போன்ற செலவினங்களில் பொதுப்பணத்தை விரயமாக்குவது சரியல்ல. இது போன்ற தவறான முயற்சிகளுக்கு இது சரியான தருணமல்ல.

அரசு எனது வேண்டுகோளை நன்கு கவனித்து நாட்டின் ஒற்றுமைக்கு இடையூறாக இந்தி பேசாத மாநிலங்களில் வெறுப்பை வளர்க்காமல் நல்லெண்ணத்துடன் செயல்படும் என்று நம்புகிறேன்.

நமது குடியரசுத் தலைவர் சஞ்சீவரெட்டி அவர்கள் இந்தி மொழியின் ஆதிக்கத்தை கண்டித்து அண்மையில் கூறிய அறிவுரைகள் ஜனதா அரசுக்குப் புகட்டும் நற்பாடமாகும். குடியரசுத் தலைவரின் எச்சரிக்கையை அரசு உணரவில்லையென்றால் நாடு துண்டாக்கப்படும், அதற்குள்ள பொறுப்பை ஜனதா அரசு தான் ஏற்கவேண்டுமென்று இத்தருணத்தில் எச்சரிக்க விரும்புகிறேன்.

இவ்வாறு இ. ஆர். கிருஷ்ணன் பேசினார்.

## தென்னாற்காடு மாவட்டத்தில் 14 நக்சலைட்டுகள் கைது

கடலூர். மார்ச் 23 "கடலூர் பழைய நகரிலுள்ள இந்தியன் ஓவர்சிஸ் பாங்க் திருக்கோவிலூரிலுள்ள இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் ஆகியவைகளுக்கு பாம் வைத்து தகர்த்து விடுவோம்" என்று எச்சரிக்கை தந்திகள் வந்தன. தந்திகளை அனுப்பியவர்கள் நக்சலைட்டுகளா என்று போலீசார் ஆராய்ந்துவருகின்றனர். தென்னாற்காடு மாவட்டத்தில் பதினான்கு நக்சலைட்டுகள் கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டுள்ளனர். நக்சலைட்டுகள் என்ற சந்தேகத்தின்பேரில் 150 பேர் கைது செய்யப்பட்டு பின்னர் ஜாமீனில் விடுதலை செய்யப்பட்டனர் என்று தென்னாற்காடு மாவட்ட காவல்துறை கண்காணிப்பாளர் ஜி. கணேசன் நிருபர்களிடம் கூறினார்.

❋

## சோழன் போக்குவரத்து அண்ணா தொழிலாளர் சங்கம்

திருச்சி, மார்ச் 23. சோழன் போக்குவரத்துக் கழக அண்ணா தொழிற்சங்க கிளை 2-க்கான நிர்வாகிகள் தேர்வு நடந்தது. தலைவராக ஆ. ராசசேகரன், செயலாளராக டி. சிவப்பிரகாசம், பொருளாளராக எஸ். கோவிந்தராசு செயற்குழுவினராக 9 பேரும் நிர்வாகிகளாக தேர்வு செய்யப்பட்டனர்.

சி ஆர் சி 3வது கிளைத் தலைவராக க. தங்கவேலு செயலாளராக இ. பூபாலன் பொருளாளராக ப. பரமசிவம் செயற்குழுவினராக 7 பேரும் தேர்வு செய்யப்பட்டனர்.

### கரூர்

கரூர் ஆர் சி கிளைத் தலைவராகப் பி. மோகன் செயலாளராக பி. சண்முகம் பொருளாளராக டி.வி. சாமிநாதன் ஆகியோர் தேர்வு செய்யப்பட்டனர்.

❋

## அலுவலக இடமாற்றம்

மதுரை மார்ச் 23. மதுரையில் உள்ள இராமநாதபுரம் மாவட்ட ஆட்சித் தலைவரின் தனி உதவியாளர் (செய்திமக்கள் தொடர்பு) அலுவலகம் 6, சக்கன் 2வது தெரு செனாய் நகர், மதுரை-20 என்ற முகவரியில் இயங்கி வருகிறது என்று மாவட்ட ஆட்சித் தலைவரின் தனி உதவியாளர் ப. சாமிநாதன் தெரிவித்துள்ளார்.

### அமைச்சர் ஆர்.எம்.வீ. தகவல்

# தனியார் காடுகளை அரசு ஏற்க புதிய சட்டம் வரும்

**சென்னை, மார்ச் 23- தனியார் துறையில் காடுகள் இருக்கக் கூடாது என்பதற்கு சட்டம் கொண்டுவருவது பற்றி அரசு ஆலோசித்து வருகிறது என்று அமைச்சர் ஆர். எம் வீ. கூறினார்.**

மேலவையில் தனியார் காடுகள் பாதுகாப்புதிருத்த மசோதா மீது நடந்த விவாதத்திற்குப் பதிலளித்து அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறியதாவது:

தனியாருக்கென்று காடுகள் இருக்கக் கூடாது என்று சட்டம் கொண்டு வரலாமா என்று அரசு ஆலோசித்து வருகிறது.

மரங்களை வெட்டி திருடுபவர்கள் மீது வழக்குப் போட்டால் சபை கலையும் வரை காவல் தண்டனை என்கிற அளவில் வழக்கு முடிந்துவிடுகிறது

அதை ஏன் அப்படிச் செய்யவில்லை என்று கேட்டபோது சட்டம் அவ்வளவு பலகீனமாக இருக்கிறது என்று சொன்னார்கள்.

அதைத் தொடர்ந்தே சட்டம் கடுமையாக்கப்படுகிறது

காடுகள் இயற்கை செல்வம் அவை பொதுச் சொத்துக்கள். அவற்றைப் பாதுகாக்க வேண்டியது அவசியம்.

சென்னையிலிருந்து கிழக்கு ராமநாதபுரம் வரை கடற்கரை ஓரங்களில் சவுக்கு மரம் வைத்து புயல் வேகத்தைத் தணிப்பதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன.

இவ்வாறு அமைச்சர் ஆர் எம் வீ கூறினார்.

பின்னர் மசோதா நிறைவேறியது.

நாடக சட்டத்திருத்த மசோதா மீதும் மேலவையில் சுவையான விவாதம் நடந்தது.

அமைச்சர் ஆர். எம். வீ விவாதத்துக்குப் பதிலளித்தார்.

சுவரொட்டிகளில் ஆபாசத்தைத் தடுக்க சட்டம் கடுமையாக்கப்படுவதாக அமைச்சர் ஆர் எம் வீ கூறினார்.

அந்த மசோதாவும் நிறைவேறியது.

# தமிழக பட்ஜெட்: ஏ. ஆர். மாரிமுத்து பாராட்டு

சென்னை, மார்ச் 23. தியாகிகளுக்கு உதவித் தொகையை அதிகரித்திருப்பதற்காகவும், மத்திய அரசிடம் வாதாடி அதிக நிதி உதவியைப் பெற்றதற்காகவும் நிதி அமைச்சர் நாஞ்சிலாருக்கு இ.காங்கிரஸ் சட்டமன்ற கட்சித்தலைவர் ஏ. ஆர். மாரிமுத்து பாராட்டு தெரிவித்தார்.

பட்ஜெட் மீதான பொது விவாதத்தில் ஏ. ஆர். மாரிமுத்து பேசுகையில் நாட்டின் அனைத்து தரப்பு மக்களையும் பாதிக்கும் வகையில் மத்திய ஜனதா அரசின் பட்ஜெட் அமைந்திருப்பதையும் அதனால் விலைவாசி உயர்ந்து வாழ்க்கைச் செலவு அதிகரித்திருப்பதையும் சுட்டிக்காட்டி இதன் காரணமாக மாநில அரசுகளுடைய சுமை அதிகரித்திருக்கிறது என்பதை எடுத்துக்காட்டினார்.

ஜனதா உறுப்பினர் ஜெபமணி குறுக்கிட்டு மாநில அரசு பட்ஜெட்டு பற்றி பேசாமல் மத்திய பட்ஜெட் பற்றி இங்கே பேசலாமா என்று கேட்டார்,

ஏ ஆர். மாரிமுத்து அதற்குப் பதிலளிக்கையில் இந்தியா ஒரேநாடு, தமிழகம் நாட்டின் பகுதி மேலும் மத்திய பட்ஜெட்டின் காரணமாக தமிழகம் பாதிக்கப்பட்டிருப்பதால் இங்கே சரண்சிங் பட்ஜெட் பற்றி பேசுகிறேன் என்றார்.

மேலும் அவர் தொடர்ந்து பேசுகையில் தியாகிகள் மானியத்தை உயர்த்தியிருப்பதற்கு பாராட்டு தெரிவித்தார். விடுதலைப் போரில் மூன்று மாதம் சிறை சென்றவர்களுக்குத்தான் உதவி என்ற நிபந்தனையைத் தளர்த்துமாறு அவர் கோரினார்.

மாநிலங்களுக்கு அதிக நிதி உதவி தேவை என்று தமிழக நிதி அமைச்சர் வாதாடினார். அதன் பயனாக தமிழகத்துக்கு ரூ. 150 கோடி அதிக நிதியை நிதிக்குழு வழங்கியுள்ளது இதன் காரணமாக தமிழகம் மட்டுமின்றி இந்தியாவின் பல மாநிலங்களும் பயனடைகின்றன இதற்காக தமிழக நிதி அமைச்சருக்கு பாராட்டு தெரிவிக்கிறேன்

இவ்வாறு ஏ. ஆர். மாரிமுத்து கூறினார்

சந்தா விவரம்

1 வருடச் சந்தா தொகை ரூ. 120
6 மாதச் சந்தா தொகை ரூ. 60
3 மாதச் சந்தா தொகை ரூ. 30

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது

நிர்வாகி

"அண்ணா"

275 அவ்வை சண்முகம் சாலை, சென்னை-600 014.


# அண்ணா



## வாக்காளர் பட்டியல் இணைப்பு

# கழகத் தோழர்களுக்கு அமைப்புச் செயலாளர் முக்கிய வேண்டுகோள்

அனைத்து நகராட்சிகள்- ஊராட்சிகளுக்கான (பஞ்சாயத்துகள்) வாக்காளர் பட்டியலில் சேர்ப்பு, மற்றும் ஆட்சேபணைகள் நீங்கல்கள் ஆகியவற்றை மேற்கொள்வதற்கான காலகெடுவை 31-3-79ஆம் தேதி வரை நீட்டித்து அரசு உத்தரவு பிறப்பித்துள்ளது. இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்திக் கொண்டு, அனைத்து நகராட்சி ஊராட்சிகளில் (பஞ்சாயத்துகளில்) உள்ள கழக அமைப்பாளர்கள் மற்றும் சார்பு மன்றத் தோழர்கள் வாக்காளர் பட்டியலை பரிசீலித்து, விடுபட்டுள்ள பெயர்களை சேர்க்கவும்; திருத்தங்கள் செய்யவும், மறுப்புகள் இருப்பின் அவைகளை எழுப்பவும் முறைப்படி உள்ள விண்ணப்பதாள்களைப் பூர்த்தி செய்து தேவையான முயற்சிகளை மேற்கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

கழக அமைப்பாளர்களும், சார்பு மன்ற தோழர்களும் இதனை முக்கிய கடமையாகக் கொண்டு, அவசர அவசிய உணர்வுகளுடன் விரைந்து செயல்படுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

எச். வி. ஹண்டே எம். எல். சி.,
அமைப்புச் செயலாளர்,
அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

சென்னை-14
13-3-79

தலைமைக்கழக அறிவிப்பு: 20.79

# உறுப்பினர் சேர்க்கும் காலம் நீடிப்பு

## பொதுச் செயலாளர் நாவலர் அறிவிப்பு

1. கழகத்தில் புதிய உறுப்பினர்களைச் சேர்க்கும், பழைய உறுப்பினர்களை புதுப்பிக்கும் பணிகளுக்கான காலம் 31-5-79 வரை நீடிக்கப்படுகிறது.

2. உறுப்பினர் விண்ணப்பத்தாள்கள் கோரி தலைமை நிலையத்திற்கு இதுவரையில் கடிதம் எழுதாத கிளைக்கழக அமைப்பாளர்களும், உட்கிளை அமைப்பாளர்களும் உடனடியாக கோரிக்கையை அனுப்பிவைக்கவும். மேலும் விண்ணப்பத்தாள்கள் வேண்டுபவர் தேவையான எண்ணிக்கையைக் குறித்து அனுப்பலாம்.

3. மாவட்டக் கழக - நாடாளுமன்றத் தொகுதிக்கழக - சட்டமன்றத் தொகுதிக்கழக - ஒன்றியக்கழக - நகரக்கழக அமைப்பாளர்களும் நாடாளுமன்ற - சட்டமன்ற உறுப்பினர்களும் கிளைக்கழக - உட்கிளை அமைப்பாளர்களின் முகவரிகளையும் தேவைப்படும் விண்ணப்பத்தாள்களின் எண்ணிக்கையையும் குறித்துத் தலைமை நிலையத்திற்குக் கடிதம் எழுதலாம். அவர்கள் பரிந்துரையின் பேரில் விண்ணப்பத்தாள்கள் உரிய கிளைக்கழக அமைப்பாளர்களுக்கு அனுப்பிவைக்கப்படும்.

4. மேற்குறிப்பிட்டவர்கள் கிளையோ அல்லது உட்கிளையோ இல்லாத பகுதிகளில் தக்க ஒருவரைத் தேர்ந்தெடுத்துத் தலைமை நிலையத்திற்குத் தெரிவித்தால் தலைமைக்கழகம் அவர்களின் பரிந்துரையை ஏற்றுக் குறிப்பிட்டவரை தற்காலிக அமைப்பாளராக அனுமதித்து தேவையான விண்ணப்பத்தாள்களை அனுப்பிவைக்கும்.

5. பிற அரசியல் கட்சிகளில் உறுப்பினர்களாக இருப்பவர்கள் சாதி மதச் சங்கங்களில் பொறுப்பு வகிப்பவர்கள்- குற்றங்களில் தண்டனை ஏற்றவர்கள் சமூகவிரோதமான செயல்களில் ஈடுபடுபவர்கள் தவிர்த்து, மற்றபடி கழகத்தில் உறுப்பினராகச் சேர விரும்புபவர்களை எந்த ஒரு அமைப்பாளரும் தடுக்கக் கூடாது. தகுதியானவர்களை உறுப்பினராகச் சேர்க்க மறுக்கும் அமைப்பாளர் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்க வேண்டி வரும்.

சென்னை
19.3.79

இரா. நெடுஞ்செழியன்
பொதுச்செயலாளர்

# கழக செய்திகள்

## அரியாங்குப்பம்

24-3-79 சனி மாலை 6 மணிக்கு அரியாங்குப்பம் நல்ல தண்ணீர் கிணறு திடலில். பொன். அரங்கநாதன் தலைமையில் நடக்கும் பொதுக்கூட்டத்தில் பேசுவோர்: திருப்பூர்மணிமாறன் எம். எல். ஏ, ஆர். கே. எஸ். தண்டபாணி எம். எல். ஏ. எஸ். இராமசாமி, சி. என். பார்த்தசாரதி, இரா. சேரன், பி. கே, லோகநாதன், பா. மணிமாறன், கே. பாண்டுரங்கன், எஸ். செல்வம், டி. எம். சாமி, பி. பாலன் மற்றும் பலர்.

## புதுக்கோட்டை

25-3-79 ஞாயிறு மாலை 6-30 மணிக்கு காந்தி சதுக்கம் அருகே எம்; ராமையா தலைமையில் கழகப்பொதுக் கூட்டம் நடக்கிறது சட்டப் பேரவைத் துணைத் தலைவர் எஸ். திருநாவுக்கரசு, அடியார், வீ. சா. இளஞ்செழியன் எம் பி சி. அன்பரசன் புலவர் பொன்னம்பலம் இராசகோபாலன் எஸ், ரகுபதி. ரசீத், அரசமழம் சுந்தரராசன் பே. மு. குமார் மற்றும் பலர் பேசுவர்

## திருத்துறைப்பூண்டி

25-3-79 ஞாயிறு மாலை 6 மணிக்கு பெரியபாலம் ஜவுளிக்கடை அருகே நடக்கும் கழகப் பொதுக் கூட்டத்துக்கு கே. குணாளன் தலைமை வகிக்கிறார் நாகை இறையடியான் எம். ஏ. மஜீது வி, தமிழ்மணி, எம்.எஸ். மாணிக்கம் ப. ஜெயக்குமார், மன்னை ராஜன், ஆ, திருச்செல்வம் மற்றும் பலர் பேசுவர்.

## வாணியம்பாடி

25-3-79 ஞாயிறு இரவு 7 மணிக்கு கோணமேடு பள்ளி மைதானத்தில் கே. எல்லப்பன் தலைமையில் நடக்கும் பொதுக்கூட்டத்தில் பேசுவோர்.

தமிழரசன் எம். எல், ஏ டி. அன்பழகன் எம் எல் ஏ பி. சின்னராஜு எம்எல் ஏ போளூர் பி. ஏ. கோவிந்தன், எம். சின்னத்தம்பி வி. சக்கரவர்த்தி எஸ். ஏ. பி. ராஜசேகரன் கே. எம். ரத்தினம், ஊ. சிகாமணி, துரை ஆறுமுகம், சு. கோபன்னீர்செல்வம், மா. தமிழரசன், எம். சண்முகம், சி. மூர்த்தி, ஆர். மணி மற்றும் பலர்

## அலிவலம்

25-3-79 ஞாயிறு மாலை 6 மணிக்கு அலிவலம் பெருமாள் கோவில் தெருவில் சி. நடராஜன் தலைமையில் நடக்கும் பொதுக்கூட்டத்தில் பேசுவோர்:

ஜெப்பியார் சு. தென்சோவன், அ. பெ. பால்ராசா. வி. ராஜேந்திரன் குழந்தைவேலு, மு. சின்னப்பிள்ளை மு அப்துல்லா, அரங்க சிவா, ஆர். பாண்டியன் கோ குஞ்சிதபாதம் சொ. ஞானமணி எஸ் ஆர் சரபதி. இரா. பழனிவேல், எம். யோகன், என் ராஜேந்திரன் மற்றும் பலர்

## ஆரணி

25-3-79 ஞாயிறு மாலை 6 மணிக்கு ஆரணி சைதை அண்ணா மன்றத்தில் எஸ். ஜோதிலிங்கம் தலைமையில் கழகப் பொதுக் கூட்டம் நடக்கிறது. வ. அர்ச்சுனன் எம். எல். ஏ. எம் பெருமாள் க. அண்ணாமலை, ஜெமினி ராமச்சந்திரன், எம். சின்னக் குழந்தை, ஆர். மணவாளன், க. சண்முக சுந்தரம் மற்றும் பலர் பேசுவர்.

## ஆவடி

25-3-79 ஞாயிறு மாலை 4 மணிக்கு ஆவடி மீனாட்சி திருமண மண்டபத்தில் கழகப் பொதுக் கூட்டம் நடக்கிறது. கு. கிருஷ்ணதாஸ் தலைமையில் அமைச்சர் பொன்னையன், எஸ். ஜெகந்நாதன் எம். பி. புலவர் சோமுசா, மணி மனோகரன், மு. சிவஞாண்டி ஆகியோர் பேசுவர்.

## மேல்வேலம்

25-3-79 அன்றுமாலை 7 மணிக்கு மேல்வேலம் வானொலி அண்ணாதிடலில்

எஸ். பி. மணி தலைமையில் பேசுவோர்: காடுவெட்டி கண்ணப்பன், எஸ். ஜெ ராமசாமி எம் எல் ஏ, வி. கே. ராஜு எம்எல்ஏ, கா. து. முருகேசன், சி முருகன் கோ. சண்முகம், கே. மணவாளன், ஆர். ரவிக்குமார் கே. வி. எஸ் மோகன் மற்றும் பலர் பேசுவர்

## முளப்பட்டு

31-3-79 சனிக்கிழமை மாலை 6 மணிக்கு முளப்பட்டு அண்ணா திடலில் டி. கே. அச்சுதன் தலைமையில் நடக்கும் கழகப் பொதுக் கூட்டத்தில் பேசுவோர்:

டாக்டர் நாவலர், பி. சந்திரன் எம். எல். ஏ. பி. முனுசாமி எம். எல். ஏ. என். நாராயணமூர்த்தி, பி. எம். வெங்கடேசன், ஆர். நடராச கவுண்டர், ஏ. ஷேக் ஜின்னா, வி, மண்ணு. ஆர் மணவாளன், கா. கோதண்டம், எஸ். கேசரசாக் பி. பி. கோபால், எஸ் ஷரீப் மற்றும் பலர்.

## மஞ்சை நகர்

7-4-79 சனிக்கிழமை இரவு 7 மணிக்கு மஞ்சை நகர் அங்காளம்மன் கோவில் அருகில் ஆர். பி. ராஜா தலைமையில் நடக்கும் பொதுக் கூட்டத்தில் எரியீட் டி ராஜகோபால் கி. அப்துல் லத்தீப், எம். எல் ஏ. எம். மனோகரன், ஆர் ஜெயபால், டி. வீராசாமி. ஏ, ரகுபதி, ஜெனார்த்தனன். அன்புதண்டபாணி எஸ். ராமச்சந்திரன். ஜி. கே பாலு, எம் ஏ மணி. சி. பாலுச்சாமி மற்றும் பலர் பேசுவர்

## திருவையாறு

தஞ்சை மாவட்டம் திருவையாறு நகர உரிமைக் குரல் எம் ஜி ஆர் மன்ற பொது உறுப்பினர்கள் கூட்டம் அண்ணா வீதியில் நடந்தது கூட்டத்திற்கு மன்றத் தலைவர் மூவா மகாலிங்கம் தலைமை வகித்தார் என் ரங்கராஜன் எம் நாராயணன். மருதமுத்து, ஆர் சந்திரன் ஏ கலியமூர்த்தி, சுந்தரம், என் சோமசுந்தரம், வாசுமணியன். நா ராமலிங்கம் நடராசன், எஸ் வெங்கடேசன், கே. லட்சுமிநாராயணன். எம் மனோகரன் மற்றும் பலர் பேசினர்.

## திருப்பூர்

திருப்பூர் புது ராமகிருஷ்ணபுரம் கல்யாணர் திடலில் பி. குமார் தலைமையில் கழகப் பொதுக் கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் மணிமாறன் எம். எல். ஏ, விருதை ஜெயராஜ் இரா, சுப்பிரமணியம், முகவை கண்ணன், எஸ், கேசவன், கே, கிருஷ்ணசாமி. இரா. அங்கமுத்து, பழனிச்சாமி. அய்யப்பன், மாரப்பன், எஸ். முருகசாமி, என். சொக்கலிங்கம், பி. ராஜேந்திரன் மற்றும் பலர் பேசினர்.

## சாயல்குடி

சாயல்குடியில் அண்ணா திடலில் கா. கோட்டைச்சாமி தலைமையில் கழகப் பொதுக் கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் விருதை ஜெயராஜ், முகவை சாந்தி, எஸ். டி. அரசு, டி. காதர் சபசுதீன் எஸ். ஆகாகான், காதர் சுல்தான் மற்றும் பலர் பேசினர்.

# அமைச்சர் குழந்தைவேலு நிகழ்ச்சிகள்

மார்ச் 26ந்தேதி காலை 4 மணி மொரப்பூர் 6 மணி தருமபுரி மாலை 4 மணி திருப்பூரில் கால்பந்தாட்ட விழா இரவு கோவை.

## பேச்சாளர் முகவரி

நாமக்கல்
ந. சந்திரசேகரன்
பீடாஸ்டால் பஸ்நிலையம், நாமக்கல்

மதுரை மாநகருக்கு

# பஸ்நிலையம் மார்க்கெட் ரூ. 22 லட்சம் செலவில் புதிய கட்டிடங்கள்

## அமைச்சர் காளிமுத்து அடிக்கல் நாட்டினர்

மதுரை மார்ச் 23— மதுரையின் வளர்ச்சித் திட்டங்களில் ஒரு பகுதியான முப்பெரும் திட்டங்களுக்கு உள்ளாட்சித்துறை அமைச்சர் காளிமுத்து அடிக்கல் நாட்டினார். இத்திட்டங்களின் மொத்த மதிப்பீடு ரூ 22 லட்சம் ஆகும்.

மதுரை மாநகராட்சியின் சார்பில் மூன்று பெரும் திட்டங்களுக்கான கால்கோள் விழா நடைபெற்றது.

வடபகுதி பேருந்து நிலையத்திற்கான கால்கோள்விழா பனைகல்சாலையில் நடைபெற்றது 3 ஏக்கர் நிலப்பரப்பில் ரூ. 12 லட்சம் செலவில் இந்த பேருந்து நிலையம் அமைக்கப்படும்.

மத்திய காய்கறி நாளங்காடி மேம்பாட்டுத் திட்டத்துக்கான அடிக்கல் நாட்டுவிழா வடக்காவணி மூலவீதியில் நடைபெற்றது.

ரூ. 4 லட்சம் செலவில் 2 மாடிக் கட்டிடமாக நாளங்காடி கட்டப்படும். சுமார் 460 கடைகள் இருக்கும் முதல் தளத்தில் சுமார் 104 பூக்கடைகள் இருக்கும்.

ரூ 6 லட்சம் செலவிலான வணிக மற்றும் சுகாதார மையங்களுக்கான கால்கோள் விழா ஆர். எம். எஸ் சாலையில் நடைபெற்றது.

மூன்று திட்டங்களும் மூன்றே மாதத்தில் கட்டி முடிக்கப்படும்.

மூன்று விழாக்களுக்கும் மாநகராட்சி மேயர் எஸ். முத்து தலைமை தாங்கினர். மாநகராட்சி ஆணையாளர் ஆ. சேவுகபாண்டியன் வரவேற்றார். துணைமேயர் கே. எஸ் சந்தானம் நன்றி கூறினர்.

முப்பெரும் திட்டங்களுக்கும் உள்ளாட்சித் துறை அமைச்சர் காளிமுத்து அடிக்கல் நாட்டினார் விழாக்களில் கழகக் கவுன்சிலர்கள் கருணைதாசன், நவநீதகிருஷ்ணன், து. கிருஷ்ணன், வி. எம். ராசாங்கம், எஸ். பி. பால்ராஜ், எம். முனியசாமி ரத்தினவேல், ஜனார்த்தனம் மு, கிருஷ்ணன், பட்டுராசன், நாகூர்பிச்சை, பாலகிருஷ்ணன், ராஜேந்திரன் கேசவன், அப்சா உசேன், அய்யாவு சாலைமுத்து, கே. எம். தாஜுதீன், நடராசன் கே. எம். சின்னு ஆகியோரும் கலந்து கொண்டனர்.

# வானொலியில் டாக்டர் ஹண்டே

சென்னை, மார்ச் 23- சென்னை வானொலியில், 25 ந்தேதி ஞாயிறு இரவு 8 45 மணிக்குகுடும்பநலத் திட்டம் சமுதாயத்தில் இன்னும் அதிக அளவு ஊன்ற வேண்டும் என்ற தலைப்பில் நடைபெறும், கலந்துரையாடலில் கழக அமைப்புச் செயலாளர் டாக்டர் ஹண்டே எம். எல். சி. பங்கேற்றுபேசுகிறார்.

# பிரதமர் மன்னிப்பு கேட்டார்

[ 3-ம் பக்கத் தொடர்ச்சி ]

இருந்து அடிக்கடி எனக்கு தகவல் தெரிவிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

துயர நிகழ்ச்சி நடந்துவிட்டால் அந்த நிமிடமே நாடாளுமன்ற கூட்டத்தை தள்ளி வைக்க வேண்டும் என்று, "எம். பி."க்கள் பலர் என்னிடம் கூறியிருந்தார்கள்

## விமானம்

பகல் 12,30 மணிக்கு எனக்கு ஒருதகவல் வந்தது துயர நிகழ்ச்சி நடந்து விட்டால் ஜெயப்பிரகாசரை உடனே பாட்னாவுக்கு (பீகார்) கொண்டு போக ஒரு விமானம் தயாராக இருக்க வேண்டும் பீரங்கி வண்டிக்குப் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று மராட்டிய மாநில அரசு தலைமைச் செயலாளர் தகவல் அனுப்பினர்,

## 'இறந்துவிட்டார்'

இதன் பிறகு புலனாய்வுத் துறை (மத்திய ரகசிய போலீஸ் தலைமை டைரக்டரிடம் இருந்து எனக்கு ஒரு தகவல்வந்தது. ஜெயப்பிரகாசர் இறந்து விட்டதாக, பம்பாயில் உள்ள துணை டைரக்டரிடம் இருந்து செய்தி வந்திருப்பதாக அவர் குறிப்பிட்டு இருந்தார்.

இந்த தகவலை, உடனடியாக நாடாளுமன்றத்துக்கு தெரிவித்துவிட வேண்டும் என்று கருதினேன். அதன்படி செய்தியை தெரிவித்து விட்டேன்.

நாடாளுமன்ற கூட்டம் தள்ளி வைக்கப்பட்ட 15 நிமிடத்தில் ஜெயப்பிரகாசர் உயிரோடு இருக்கிறார் என்ற தகவல் எனக்கு வந்தது.

இறந்து விட்டதாக தவறான தகவலை, புலனாய்வுத் துறை துணை டைரக்டர் எப்படி கொடுத்தார்? அவருக்கு இந்த தகவலை கொடுத்தது யார் என்று விசாரணை நடத்த உத்தரவிட்டு இருக்கிறேன். அந்த விவரங்கள் தெரியவந்ததும் தவறு செய்தவர் மீது நடவடிக்கை எடுக்கப்படும்.

## மகிழ்ச்சி

ஜெயப்பிரகாசர் இறந்துவிட்டார் என்ற தவறான தகவலை தெரிவித்தற்காக வருந்துகிறேன்.

ஆயினும் அவர் உயிருடன் இருப்பது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன்.

## 10 ஆண்டு வாழ்வார்

நடந்துவிட்ட தவறு காரணமாக, ஜெயப்பிரகாசர் நன்குகுணமடைந்து இன்னும் 10 ஆண்டு காலமாவது நம்மோடு வாழ்வார் என்று நம்புவோம். அதற்காக பிரார்த்தனை செய்வோம்"

இவ்வாறு தேசாய் கூறினார்.

## பாலாபழனூர்

இது பற்றிய விவாதத்தில் கழக குழுத் தலைவர் பாலாபழனூர் பேசுகையில் "தவறான தகவலைக் கொடுத்த அதிகாரிகளை விசாரித்து தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும் தாட்சண்யம் காட்டக்கூடாது" என்று கோரினார்.

தேசாய் தமது விளக்கத்தை அளித்தபோது, காங்கிரஸ் உறுப்பினர்கள் குறுக்கிட்டு நீங்கள் செய்தது சாதாரணதவறு இல்லை பெரிய குற்றம். அதற்கு நீங்கள் ராஜினாமா செய்யவேண்டும் என்று குரல் எழுப்பினார்கள்.

## தவறுதான் குற்றம் அல்ல

அதற்கு தேசாய் 'நான் செய்தது பெரிய தவறுதான் ஆனால் குற்றம் அல்ல எனவே ராஜினாமா செய்ய வேண்டிய அவசியம் எழவில்லை இதுபோன்ற தவறுகள் இதற்கு முன்பும் நடந்துள்ளன என்று பதில் அளித்தார்

## ராஜ்யசபை தள்ளிவைப்பு

இதற்கு முன்பு மாநில அவை கூட்டம் நடந்த தவறான தகவலை அளித்த பிரதமர் தேசாய் ராஜினாமா செய்யவேண்டும் என்று இ. காங்கிரஸ் உறுப்பினர்கள் கூச்சல் எழுப்பினர் சபையில் ஒரே அமளி ஏற்பட்டதால் மாநிலங்களவைக் கூட்டம் தள்ளி வைக்கப்பட்டது.